

உ

திருச்சிற்றம்பலம்.

# சிவராத்திரி மான்மியம்.



யாழ். சி. செல்லையாப்பிள்ளையால்

இயற்றப்பட்டது.

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம்.

1908.

விலை அணா 4.




உ

திருச்சிற்றம்பலம்.

# சிவராத்திரிமான்மியம்.



இஃது

யாவருக்கும் எளிதிலே பயன்படும்பொருட்டு,

கொழும்பில் நடைபெறும்

சைவபரிபாலன சபைத் தாபகர்

## யாழ். சி. செல்லையாப்பிள்ளையால்

கத்தியரூபமாகச் செய்து,


சென்னை:

ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



1908.

விலை அணா 4.

# பொருளடக்கம்.

கணபதிதுணை.

# சிவராத்திரிமான்மியம்.

சிவராத்திரியாவது, கருணைக்கடலாகிய சிவபெருமான் சகல ஆன்மாக்கட்கும் அருள்புரியும் விசேஷ காலமாகிய இராத்திரியாம்.

## உற்பத்தி.

முன்னொரு காலத்துண்டாகிய பிரளயகாலத்திலே சீவராசிகள் முழுதும் சிவத்தி லொடுங்க, அச் சிவத்தின் வேறுகாது விளங்கும் பராசத்தியாராகிய உமாதேவியார், அவ்விராத்திரி நான்கு யாமத்தும் சிவபெருமானைப் பூசித்து, "எம்பெருமானே! அடியேன் தேவரீரைப் பூசித்த இவ்விராத்திரி சிவராத்திரியெனப்படல் வேண்டும். இத் தினத்திலே தேவரீரை வழிபடுவோர் அனைவரும் இம்மையில் வேண்டிய போகங்களை அனுபவித்து மறுமையில் சாயுச்சியமாகிய பரமுத்தி யெய்தல் வேண்டு" மெனப் பிரார்த்தித்து, அவ்வாறே பெற்றனர். ஆதலின், அவ்விரவு சிவராத்திரியெனப் பெயர் பெற்றது.

பின்னோர் காலத்து ஓர் பெரும்பிரளய முண்டாகி உலக முழுதையுந் தன்னுளடக்கி விட்டது. அப்பொழுது விஷ்ணுமூர்த்தியானவர், சலத்தில் மூழ்கிக்கிடக்கும் உலகத்தைப் பன்றிவடிவங்கொண்டு தமது கொம்புகளாற்றூங்கி மேலேயுயர்த்தி நிறுத்தித் தமது உந்திக்கமலத்தி னின்றும் பிரமனைத் தோற்றுவித்துப் பழையபடி படைப்புத் தொழிலில் நிறுத்திவிட்டுப் பாற்கடலிலே பள்ளிகொண்டனர். பிரமதேவர், தாம் சிருட்டித்த உலகத்தை நோக்கித் தருக்குற்

றனர். இவ்வாறு பிரமாவும் விஷ்ணுவும் அகங்கார வசத்த ராய்ப் பெருஞ்சமர் விளைத்தனர். அப்போது சருவ வியாபக ராகிய சிவபெருமான் அவர்களுடைய அஞ்ஞானத்தை நீக்கி ஆட்கொள்ளத் திருவுள்ளங்கொண்டு அவர்கள் காணும்படி அக்கினிஸ்தம்பமாகத் தோன்றியருளினர். அக்காலத்துப் பிரமதேவர் அச் சோதியின் முடியைக் காணுமாறு அன்ன ரூபங்கொண்டு மேலே பறந்தார்; விஷ்ணு அதன் அடியைக் காணுமாறு பன்றிரூபங்கொண்டு பூமியைக் கீண்டு சென்றார். இதற்குள் ஓராயிரவருடங் கழிந்தனவென்ப. பின்பு இரு வரும் முடியையும் அடியையுங் காணாதவராயும், சிறகுகளை யும் கொம்புகளையும் இழந்தவர்களாகியும், தம்மைத் தருக் குறச்செய்த அஞ்ஞானத்தைக் காணாதவர்களாகியும் தத்தம் வலிகுன்றிப் பஞ்சாட்சரத்தைச் செபித்துக்கொண்டு சோதி யைச் சமீபித்துத் துதித்து நின்றார்கள். அப்பொழுது சகல லோகைக நாயகராகிய கடவுள் அச் சோதியினின்றும் * லிங் கோற்பவ மூர்த்தமாய் அடியையும் முடியையுங் காட்டாது ஒரு முகூர்த்தகாலம் காட்சிகொடுத்து, "உங்கள் மத்தியில் யாம் எழுந்தருளிய இவ்விராத்திரி சிவராத்திரியாம்; இம் மாசி மாதத்துக் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி திதியில் யாவரேனும் நம்மைப் பூசிக்கின் முத்திநலம் ஈவோம்; பூர்வத்தில் உமா தேவியார் பூசைசெய்து வரம்பெற்ற தினமும் இஃதே" எனத் திருவாய்மலர்ந்து மறைந்தருளினர். இச் சரித்திரம் கந்தபுராணம்முதலிய நூல்களுள்விரித்துக்கூறப்பட்டுள்ளது.

---

* லிங், என்பது சிவம்: கம், என்பது சொரூபம். ஆதலால், 'லிங் கம்' என்பது சிவசொரூபமெனவறிக. சிவசொரூபமாகிய லிங்கா காரம் ஸ்ரீபிரணவ பஞ்சாக்ஷர வடிவமாம்.

லிக என்னுந்தாது சித்திரித்தல் என்னும் பொருளுடையதாத லின், உலகத்தைச் சிருட்டிமுதலிய பஞ்ச கிருத்தியங்களாற் சித்தி ரிக்கும் சிவப் பிரபாவமே சிவலிங்கமெனப்படும் என்பதும் அமையும்

" அரியும் யானுமுன் றேடமெவ் வனற்கிரி யனல
கிரியெ னும்படி நின்றதா லவ்வொளி கிளர்ந்த
இரவ தேசிவ ராத்திரி யாயின திறைவற்
பரவி யுய்ந்தன ரன்னதோர் வைகலிற் பலரும்."

எனவே, மாசிமாதத்துக் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசிதினமே மகாசிவராத்திரியாகும்.

சிவராத்திரி, அநுட்டிப்போர் தகுதிக்கேற்ப நித்திய சிவராத்திரி, பக்ஷ சிவராத்திரி, மாச சிவராத்திரி, யோக சிவராத்திரி, மாக சிவராத்திரி என ஐந்து வகைப்படும்.

க. ஒரு வருடத்திலே நிகழும் பன்னிரண்டு மாசங்களிலே, பூர்வபக்கம் அபரபக்கமென்னும் இருபக்கங்களினும் வரும் சதுர்த்தசிகள் இருபத்துநான்கும் நித்திய சிவராத்திரியாம்.

உ. தைமாசத்திலே அபரபக்கப் பிரதமை முதற் பதின்மூன்றுநாளும் ஒவ்வொரு பொழுதுண்டு பதினான்காந் தினமாகிய சதுர்த்தசியிலே சிவபெருமானை ஆராதிப்பது பக்ஷ சிவராத்திரியாம்.

ங. மாசிமாசத்தில் அபரபக்ஷ சதுர்த்தசியும், பங்குனிமாசத்திலே முதற்றிருதியையும், சித்திரைமாசத்திலே அபரபக்ஷ அட்டமியும், வைகாசிமாசத்திலே முதலட்டமியும், ஆனிமாசத்திலே பூர்வபக்ஷ சதுர்த்தியும், ஆடிமாசத்திலே அபரபக்ஷ பஞ்சமியும், ஆவணிமாசத்திலே பூர்வபக்ஷ அட்டமியும், புரட்டாதிமாசத்திலே முதற் றிரயோதசியும், ஐப்பசிமாசத்திலே பூர்வபக்ஷத் துவாதசியும், கார்த்திகை மாசத்திலே முன்வரும் சத்தமியும், பின்வரும் அஷ்டமியும், மார்கழிமாசத்திலே இருபக்ஷங்களிலும் வரும் சதுர்த்தசிகளும், தைமாசத்திலே பூருவ பக்ஷத் திருதியையும் மாசசிவராத்திகளாம். [மார்கழி மாசத்துச் சதுர்த்தசி திருவாதிரை நக்ஷத்

திரத்தோடு சேர்ந்துவரினும், மாசிமாசத்து அபரபக்க சதுர்த்தசி ஆதிவார மங்களவாரங்களிலே வரினும் மிகவிசேடமாம். அத் தினங்கள் மூன்றுகோடி சிவ நிசிகளுக்குச் சமமாம்.] *

ச. சோம வாரத்திலே பகலும் இரவும் பூரணயாய் அமாவாசையிருப்பின் அது யோக சிவராத்திரியாம். † அபரபக்க சதுர்த்தசி சோமவாரத்திலே சேர்ந்து நான்கு யாமங்களும் பூரணமாயிருக்கின் அதுவும் யோக சிவராத்திரியாம். நான்காவது யாமத்திலே அரைநாழிகை அமாவாசை யிருக்கினும், அவ்வாறே சதுர்த்தசியிருக்கினும் யோக சிவராத்திரியேயாம்.

ரு. ஒவ்வொரு வருடத்திலும் மாசிமாசத்திலே வரும் அபரபக்க சதுர்த்தசியே மாக சிவராத்திரி யெனப்படும். அதுவே மகா சிவராத்திரியாகும். மகாசிவராத்திரி எனினும் மகா நிசி எனினும்பொருந்தும்.

## மகாநிசியின் வகை.

மகா நிசியென்பது மத்தியஸ்தமா யிருக்கிற இரண்டு யாமங்களாம். மகா நிசியை மூன்று கூறு செய்து அவற்றுள் இரண்டாவது அமிசத்திலே திரயோதசியும், பின்பு சதுர்த்தசி

---

* மாசியில் பிரமாவும், பங்குனியில் விஷ்ணுவும், சித்திரையில் உமாதேவியாரும், வைகாசியில் சூரியனும், ஆனியில் உருத்திரரும், ஆடியில் குமாரக்கடவுளும், ஆவணியில் சந்திரனும், புரட்டாதியில் ஆதிசேடனும், ஐப்பசியில் இந்திரனும், கார்த்திகையில் சரஸ்வதியும், மார்கழியில் மனோன்மனியும், தையில் இடபதேவரும் சிவராத்திரி விரதமனுட்டித்து இஷ்ட சித்திகளைப் பெற்றார்கள்.

† சதுர்த்தசி திதி அன்றில்லாவிடினும் அது யோகசிவராத்திரியெனக் கொள்ளப்படும் விசேட முடையதென உபதேசகாண்டம் கூறுகின்றது.

யும் வருமாயின் அது உமா சிவராத்திரி யெனப் பெயர் பெறும். திரயோதசியுடன் கூடிய சதுர்த்தசியே விசேடம், (திரயோதசி உமாதேவியார் அமிசமும், சதுர்த்தசி சிவபெருமான் அமிசமு மாதலின்). ஒரு இராத்திரியில் திரயோதசி பூரணமாக விருந்து ஒரு கலையளவு சதுர்த்தசி யிருக்குமாயின், அது உத்தமோத்தம சிவராத்திரியாம். அர்த்தராத்திரிக்கு முன் திரயோதசியோடு கூடிய சதுர்த்தசி யிருக்குமாயின் அது உத்தம சிவராத்திரியாம். திரயோதசி யானது சூரியாஸ்தமனமாய் நான்கு நாழிகைவரையிருந்தால் அது பூதவித்தை யெனப்படும். அது உத்தமத்தில் மத்திம சிவராத்திரியாம். உதயமுதல் மறுநாள் உதயம் வரையுமுள்ள இரவும் பகலும் சதுர்த்தசி யிருக்குமாயின் அது மத்திம சிவராத்திரியாம். திரயோதசி சம்பந்தம் இல்லாமையின் அது மத்திம சிவராத்திரி யாயிற்று. உதயத்திற் றிரயோதசியும் அப்பாற் சதுர்த்தசியு மிருந்து இராத்திரியிலே அமாவாசை வந்து கூடுமாயின், அது அதம சிவராத்திரியாம். அமாவாசை சம்பந்தப்படும் உபயயோகத்தால் அது அதம மாயிற்று.

அமாவாசை சம்பந்தமான அதம சிவராத்திரியிலே சிவார்ச்சனை செய்யலாகாது. அறியாமையினாலே ஒருவர்செய்யின் அது அவரது பூர்வ புண்ணியங்களைக் கெடுப்பதற் கேதுவாகுமென வாதுளத்திலும்; புருடர்களுக்குப் பயத்தையும் அரசர்களுக்குச் சலனத்தையு முண்டுபண்ணு மெனக் காமிகத்திலும்; அந்த இராத்திரியிலே புருடர்கள் விழித்திருந்தால் அவர்களுக்குப் பிரமஹத்தி தோஷம் சம்பவிக்கு மெனச் சந்தானத்திலும் விதிக்கப்பட்டிருத்தலால் அதம சிவராத்திரி யொழிந்த உத்தமோத்தமாதி சிவராத்திரிகளிலேயே சிவபிரானைப் பூசிக்கத் தக்கது. இனி, உத்தமோத்தமாதி சிவராத்திரிகளின்றி அதம சிவராத்திரியே நேருமாயின், அதனையும்

சிவராத்திரியாகக் கொள்ள வேண்டுவதேயாம். ஆனுல் அதில் அமாவாசை தோஷமிருப்பதால் அது நீங்கும் பொருட்டுச் சிவாக்கினியில் அகோராத்திர மந்திரத்தைக் கொண்டு நெய்யினுல் நூறு ஆகுதி பண்ணி அக்கினி காரியத்தை முடித்து அக்கினியிலே யிருக்கும் சிவபெருமானைச் சிவலிங்கத்திலே யோஜித்து முதற்சாம பூசை செய்தல் வேண்டும்.

## சிவராத்திரி விரதம் அநுட்டித்தற்கு யோக்கியர்.

இவ் விரதம் யாவருக்குந் தர்மசாதனமாயுள்ளது. பிராமணுதி வருணத்தவர்கட்கும், பிரமசரிய முதலிய ஆசிரமத்தவர்கட்கும், ஸ்திரீகட்கும், சிசுக்கட்கும், தாசி தாசர்கட்கும் இவ்விரதம் அனுட்டிக்கத் தக்கது. தேவர் தானவர் முதலிய சகல பிராணிகட்கும் தகுதியா யுள்ளது.

## சிவராத்திரிவிரதம் அனுட்டிக்கும் முறை.

சிவராத்திரி விரத மனுட்டிப்போர், அதற்கு முதற் றினத்திலே ஒருபொழுது உணவுசெய்து ஸ்திரீ சங்கமம் விலக்கி விடுதல் வேண்டும். அன்று விடியற்காலத் தெழுந்திருந்து, 'மானுடப்பிறவி யடைதல் அரிது. அது துக்கமுடையதும் சாரமற்றதுமா மாதலின் அம் மானுடப் பிறவியை இவ் விரதத்தாற் பயன்படுமாறு செய்கின்றே' னென நிச்சயித்துக்கொண்டு அருகிருப்பவர்களையும் விரத மிருக்கச் செய்தல் வேண்டும். பின்பு, தந்த தாவனஞ்செய்து நதிமுதலான புண்ணிய தீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து, நித்திய கன்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, நைமித்திகானுஷ்டானஞ் செய்ய ஆரம்பித்தல் வேண்டும். சிவாலயத்திலிருந்து செய்யும் புண்ணியகாரியங்கள் ஒன்று அநந்தமாகு

மாதலின், சிவசந்நிதானத்திலிருந்து * வழக்கப்படி சிவபூசை செய்து முடித்து, நமஸ்கரித்து, சுவாமி! வாமதேவா! மகாதேவா! நீலகண்டா! சதாசிவா! தேவரீரது கருணையால் சிவராத்திரி விரதத்தை யனுட்டிக்க வேண்டுமென் றிச்சையுற்றேனாதலின், அது நிர்விக்கினமாக முடியுமாறும் இவ் விரதம் முடியும் வரைக்கும் காமம் முதலிய பகைகள் என்னைத் துன்புறுத்தாமலும்; துட்டர்களோடு வசனித்தல், அசுத்தர்களைப் பரிசித்தல், ஐம்புலன் வழியே மனத்தைச் செலுத்தல், பகல் நித்திரைசெய்தல், சலபானஞ் செய்தல் முதலியன விலகி யிருக்கவும் அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டு, பூசைத்திரவியங்களைச் சேகரித்துக் கொள்ளுதல் வேண்டும். தான் வசிக்குமிடத்துக் கருகே எந்தச் சிவலிங்கமூர்த்தம் பிரசித்தமாயும் புண்ணியகரமாயும் பூசிக்கத் தக்கதாயுமுளதோ, அச் சிவலிங்கத் தருகேசென்று அப் பரார்த்த லிங்கத்துக்குத் தென்றிசையிலாவது மேற்றிசையிலாவது பூசை செய்தற்குத் தக்கவிடம் ஏற்படுத்திக்கொண்டு தான் சேகரித்து வந்த பூசைத் திரவியங்களை வைத்துக் கொள்ளல்வேண்டும்; மீண்டும் அத் திருக்கோயிலிலேயேஸ்நானஞ்செய்து பரிசுத்தமான தோய்த்துலர்ந்த வஸ்திரந் தரித்து மூன்றுதரம் ஆசமனஞ்செய்து பூசைக்கு ஆரம்பித்தல்வேண்டும். முதலில் அசரலிங்கமாகிய அப் பரார்த்த லிங்கத்திற்கு மந்திர பூர்வகமாய் உபசாரத்துடன் பூசைசெய்வித்தல்வேண்டும். மந்திரமின்றிப் பூசைசெய்தல் கூடாது. எவ்வெத்திரவியங்கட்கு எவ்வெம் மந்திரங்கள் சொல்லப்பட் டிருக்கின்றனவோ அவ்வத் திரவியங்களை அவ்வம் மந்திரங்களைக் கூறியே பூசை செய்தல்வேண்டும். பின்பு, கீதம் நிருத்தம் நாட்டியம்

---

* ஆன்மார்த்தபூசை ஆலயம், புண்ணியஸ்தலம், நதிக்கரை, பருவதச்சாரல், புஷ்பவனம், ஆசாரியர் வீடு, தன் வீடு முதலிய தானங்களுள் ஒன்றிற்செய்யலாம்.

வாத்தியம் இவற்றைப் பத்தியுடன் சமர்ப்பிக்க வேண்டும். இவ்வாறு முதற்சாம பூசைசெய்து சிவமந்திரஞ் செபித்து, தான் பார்த்திவ லிங்கபூசையை நிதமுஞ் செய்யும் வழக்கமுடையனுயின் தன்வழக்கப்படி அப் பூசையைச்செய்து முடித்தல் வேண்டும். முன்னே பார்த்திவ லிங்கபூசை செய்தாலுஞ் செய்யலாம். பின், சிவபெருமான் தன்னிடத்தில் தயைவைக்கும்படி அநேகவித சிவதோத்திரங்களாற் றியானஞ்செய்தும், சிவமகிமையைப் பிறர்க்குச் சொல்லியும் அல்லது பிறர் சொல்லச் சிரவணஞ்செய்தும் இவ்வாறு நான்கு யாமங்களிலும் நான்கு பார்த்திவ லிங்கங்களைச் செய்து ஆவாகனுதி விசர்ச்சனுந்தமான பூசையைச்செய்து முடித்து, ஸ்தாபித லிங்கத்தையும் பூசை செய்வித்து, நித்திரையின்றி உற்சவ முதலிய சிவ பணிவிடைகளைச் செய்து விழித்திருந்து, இரவைக்கழித்து, விடியுமுன் மீண்டும் ஸ்தாபித லிங்கத்துக்கும் பூசை செய்வித்து, ஸ்நானஞ்செய்து சந்தியாவந்தன முதலியவற்றை முடித்து, சுவாமீ! தேவரீர் கிருபையால் யான் ஆச்சிரயித்த சிவராத்திரி விரதத்தை முடித்தேன். என் சத்திக்கேற்ப யான்செய்த தவத்துக்குத் தேவரீர் சந்தோஷித்து நல்லபலனைக் கொடுத்தல்வேண்டும். அடியேனிடத்தில் அன்பு வைத்து அடியேனை ஆட்கொள்ளுதல்வேண்டும். திரும்பவும் யான் பூசைசெய்யுஞ் சமயத்தில் எழுந்தருளவேண்டும். என் வமிசத்தில் தேவரீரது பூசை எப்பொழுது மிருக்கவேண்டும். என் மனதுக்குத் தேவரீர் எப்பொழுதும் சமீபித்திருத்தலும் வேண்டுமெனப் புஷ்பாஞ்சலி சமர்ப்பித்து, நமஸ்கரித்து; பார்வதி தேவியாரையும் அன்புடன் வணங்கித் தான் செய்த பூசாபலனைச் சிவப்பிரீதிசெய்து சலபானஞ்செய்து அவ் விரத நியமத்தை விடுதல்வேண்டும்.

சிவராத்திரி நான்கு யாமப் பூசையும் அவ்வக்காலத்துச் செய்ய இயலாதவர்கள் அந் நான்கு பூசையையும் ஒருகாலத்

திற் சேர்த்துச் செய்யலாம். பரார்த்தம் ஆன்மார்த்தமென்னு மிரண்டிலும் சிவராத்திரி நான்கு யாமப் பூசையிலே சூரியன் முதலிய பரிவாரங்களுக்கும் சோமாஸ்கந்தர் முதலிய மூர்த்தி களுக்கும் பூசைசெய்ய வேண்டுவதில்லை. பரார்த்தத்திலே மகாலிங்க முதலிய மூர்த்திகளுக்கும், ஆன்மார்த்தத்திலே மகா லிங்கத்துக்கும் மாத்திரம் பூசைசெய்தல் வேண்டும். பரார்த்தம் ஆன்மார்த்தம் இரண்டிலும் விநாயகக் கடவுளுக்கு மாத்திரம் நான்கு யாமமும் பூசைசெய்பலாம்; சண்டேசுர பூசை நான்கு யாமமுஞ் செய்தல்வேண்டும்.

சிவராத்திரி தினத்திலே இரவும் பகலும் நித்திரையின் றிச் சுத்த உபவாசமாக விருத்தல்வேண்டும்; அதுவே உத்த மம். அது கூடாதாயின் முதலாம் யாம பூசை முடிந்தபின் னர்ச் சுவாமிக்கு நிவேதித்த பாலு நீருமாவது பழமாவது புசிக்கலாம். கிழங்கு, அபூபம் முதலிய பலகாரங்கள் உட் கொள்வது மத்திமம்.

சிவபூசையில்லாதவர் ஊணுறக்கமின்றி நான்கு யாம மும் ஸ்ரீ பஞ்சாட்சர செபத்தோடு சிவபுராணங்களைக் கேட் டலும், சிவஸ்தோத்திரஞ் செய்தலும் சிவாலயங்களிற் சென்று சிவதரிசனஞ்செய்தலும் வேண்டும்.

சிவராத்திரி தினத்தில் இரவு பதினான்கு நாழிகைக்கு மேல் மூன்றேமுக்கால் நாழிகை லிங்கோற்பவகாலம்: இக்கா லத்திலே சிவதரிசனஞ் செய்வது உத்தமோத்தம புண்ணி யம். நான்குயாமமும் நித்திரையொழிக்க இயலாதவர் லிங் கோற்பவகாலம் நீங்கும் வரையுமாயினும் நித்திரையொழித் தல் வேண்டும்.

---

# சிவராத்திரி பூசைக்குரிய அபிடேகாதி திரவியங்கள்.

### க-வது யாமம்.

| | |
|---|---|
| அபிஷேகம் | பஞ்சகௌவியம் |
| வஸ்திரம் | செம்பட்டு |
| ஆபரணம் | பொன்னுபரணம் |
| பத்திரம் | வில்வம் |
| புஷ்பம் | தாமரை, அலரி |
| லேபனம் | பச்சைக்கர்ப்பூரஞ்சேர்ந்த சந்தனம் |
| நைவேத்தியம் | முற்கான்னம், பாலன்னம் |
| பழம் | வில்வப்பழம் |
| தூபம் | சாம்பிராணி |
| தீபம் | புஷ்பதீபம் |
| வேதம் | இருக்கு. |

### உ-வது யாமம்.

| | |
|---|---|
| அபிஷேகம் | பஞ்சாமிர்தம் |
| வஸ்திரம் | மஞ்சட்பட்டு |
| ஆபரணம் | மரகத ரத்நாபரணம் |
| பத்திரம் | துளசி, வில்வம் |
| புஷ்பம் | சண்பகம், தாமரை |
| லேபனம் | அகில் |
| நைவேத்தியம் | பாயசான்னம், பரமான்னம், லட்டு முதலிய பலகாரவகைகள். |

| | |
|---|---|
| பழம் | பலாப்பழம் |
| தூபம் | சந்தனக்கட்டை |
| தீபம் | நக்ஷத்திர தீபம் |
| வேதம் | யசுர். |

௩-வது யாமம்.

| | |
|---|---|
| அபிஷேகம் | பலோதகம், தேன் |
| வஸ்திரம் | வெண்பட்டு |
| ஆபரணம் | மாணிக்க ரத்நாபரணம் |
| பத்திரம் | முட்கிளுவை, வில்வம், அறுகு |
| புஷ்பம் | செங்கழுநீர், ஆத்தி, பிச்சி |
| லேபனம் | கஸ்தூரிசேர்ந்த சந்தனம், பச்சைக்கர்ப்பூரம் |
| நைவேத்தியம் | கிருசரான்னம், மாவாற்செய்த நெய்சேர்ந்த பலகாரவகைகள் |
| பழம் | மாதுளம்பழம் |
| தூபம் | குங்கிலியம் |
| தீபம் | பஞ்சமுகதீபம் |
| வேதம் | சாமம். |

௪-வது யாமம்.

| | |
|---|---|
| அபிஷேகம் | கந்தோதகம், கருப்பஞ்சாறு |
| வஸ்திரம் | நீலப்பட்டு |
| ஆபரணம் | முத்தாபரணம் |
| பத்திரம் | விளா |
| புஷ்பம் | நந்தியாவர்த்தம், நீலோற்பலம், நறுமணங்கமழும் பலவகைப் புஷ்பங்கள் |

| | |
|---|---|
| லேபனம் | புனுகுசேர்ந்த சந்தனம், குங்குமப்பூ |
| நைவேத்தியம் | சுத்தான்னம், கோதுமை, சர்க்கரை நெய் சேர்ந்த பலகார வகைகள் |
| பழம் | நாலுவகைப்பழங்கள் |
| தூபம் | கர்ப்பூரம் |
| தீபம் | வில்வதீபம் |
| வேதம் | அதர்வணம் |

சுத்தான்னம் நான்குயாமமும் நிவேதிக்கலாம். இருக்கு முதலிய வேதங்கள் ஓதுதற்கு அதிகாரிகளல்லாதவர் தமிழ் வேதமாகிய தேவாரதிருவாசகங்களோதக் கடவர். சிவராத்திரி விசேஷதினமாதாலால் யதா விதியான அபிஷேகங்களும் சோடசோபசார தீபாராதனைகளும் செய்தல் வேண்டும். அத் தினத்திலே திருக்கோயிலிலே நெய்விளக்கேற்றுதல், அபிஷேக நைவேத்திய திரவியங்கள் கொடுத்தல், யாமங்கள் நான்கினும் பிராமண போசனஞ் செய்வித்தல், மறுநாட் போசனத்துக்கும் அவ்வவ் யாமத்திலேயே பிராமணர்களுக்குத் தக்ஷிணை கொடுத்து நியமித்துக் கொள்ளுதல், இயன்ற தானங்கள் கொடுத்தல் ஆகிய இவை விசேட புண்ணியங்களாம்.

[குறிப்பு—பஞ்ச கௌவியமாவது விதிப்படி கூட்டி அமைக்கப் பட்ட பால் தயிர், நெய், கோசலம், கோமயம் என்பவைகளினது தொகுதி.இது பிரம கூர்ச்சமெனவும் பெயர்பெறும். பால் ஐந்து பலமும், தயிர் மூன்று பலமும், நெய் இரண்டு பலமும், கோசலம் ஒரு பலமும், கோமயம் கைப் பெருவிரலிற் பாதியுங் கொள்க.

பஞ்சாமிர்தம் ரச பஞ்சாமிர்தம் பல பஞ்சாமிர்த மென இரண்டு வகைப்படும். ரச பஞ்சாமிர்த மென்பது விதிப்படி கூட்டி அமைக்க

ப்பட்ட பால், தயிர், நெய், தேன், சருக்கரை யென்பவைகளின் தொகுதி. பல பஞ்சாமிர்த மென்பது முற்கூறிய ரச பஞ்சாமிர்தத்தோடு கூட்டி அமைக்கப்பட்ட வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம் என்பவைகளினது தொகுதி.

முற்கான்னமாவது அரிசியின் நான்கு மடங்கு கொண்ட சிறு பயறும் தேங்காய்த் துருவலும் கூட்டிப் பாகம் பண்ணப்பட்டது.

பரமான்னமாவது சருக்கரை யமுது.

பாயசான்னமாவது வேண்டிய அரிசியும், அதிற் பாதிகொண்ட பயற்றம் பருப்பும், அரிசியி னிரு மடங்கேனும் மும் மடங்கேனும் நான் மடங்கேனும் கொண்ட பாலும் கூட்டிப் பாகம் பண்ணப் பட்டது.

கிருசரான்னமாவது அரிசியின் நான்கிலொருபங்கு எள்ளுப் பொடியும், எள்ளுப்பொடியிற் பாதி நெய்யு மாகப் பிசறிய அன்னம்.

சுத்தான்னமாவது பிறி தொன்றுங் கூட்டாது தனியே பாகம் பண்ணப்பட்ட அன்னம்.]

## பாரணம்.

சிவராத்திரி தினத்திற்கு மறுநாட்காலையில் புண்ணிய தீர்த்தத்திலே விதிப்படி ஸ்நானஞ் செய்து நித்திய கன்மங்களைமுடித்துக் கொண்டு உபதேசாசாரியரை நமஸ்கரித்துச் சிவப்பிராமணர்களுக்கு வஸ்திரமுதலிய தானங்கள செய்து அவர்கள் அநுமதியைப் பெற்று ஆறுநாழிகைக்குட் பாரணஞ் செய்தல் வேண்டும். (பாரணம் உபவாசத்துக்குப் பின் செய்யும் போசனம்). இப்படிப் பாரணஞ் செய்தால் கவளமொன்றுக்கு அநேக கோடி புண்ணிய முண்டாகும். பார

ணம் பண்ணிமுடிந்த பின்னர்ப் பகற்பொழுதில் சிவபுராணங் களைக் கேட்டுக் கொண்டிருந்து சாயான்ன சந்தி முடித்து இராத்திரி ஆகாரமின்றி நித்திரை செய்தல் வேண்டும். பாரணம் முடிந்த பின்னர்ப் பகற்காலத்திலே சோம்பி நித்திரை செய்பவர் நூறு பிராமணரை நிஷ்காரணமாய்க் கொன்ற தோஷத்தை அடைவர். அசக்தியினுல் நித்திரை செய்து விடின் அத்தோஷ பரிகாரமாய் மறுநாள் விதிப்படி சாந்தி ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

உ

சிவமயம்.

# சிவராத்திரி விரதமனுட்டித்து முத்திபெற்றோர் சரித்திரம்.



## குருத்ருஹச் சருக்கம்.



பூர்வகாலத்திற் சைவசமயாசார நெறியினராகிய சில முனிவர்கள் சிருட்டி கர்த்தாவாகிய பிரமதேவனிடத்திற் சென்று, வணங்கி, தாங்கள் தவஞ்செய்தற்குத் தக்க இடமொன்றைத் தெரிவிக்க வேண்டுமென்று கேட்க; நான்முகக் கடவுள் ஒரு தருப்பையினை நேமியாக வளைத்து உருட்டிவிட, அதன்பின்னே அம்முனிவர்கள் சென்று அந்த நேமிதங்கிய நைமிச வனத்திலிருந்துகொண்டு சிவபெருமானைநோக்கித் தவஞ்செய்துகொண் டிருந்தனர். அக்காலத்திலே, சிவபெருமானுடையதிருவடிகளை எப்போதுந்தியானஞ் செய்பவரும், மெய்த்தபசியும், பராசரமுனிவர் பெற்றெடுத்த வியாசமுனிவருடைய மாணாக்கருமாகியசூதமாமுனிவர் மாதவமேஉருக்கொண்டு வந்தாற்போல அவ்விடத்தில் வந்து சேர்ந்தனர். அம்முனிவர்பிரானுடைய வரவைக்கண்ட நைமிசாரணிய வாசிகள் பரமசந்தோஷத்தா லெதிர்கொண்டுசென் றழைத்து வந்து ஆசனத்திருத்தி அர்க்கிய பாத்திய ஆசமனீய முதலிய தந்து சமீபத்திலிருந்து விண்ணப்பஞ்செய்வாராயினர். அள

வில்லாதோங்கும் புராணங்கள் யாவையும் அளந்தறிந்து, தேவர்கள் பொருட்டு ஆலகால விஷத்தையுண்டு கண்டங்கறுத்திருக்கும் சிவபெருமானுடைய உண்மையை உணர்ந்து உயிர்களுக்கெல்லாம் கருணைமேலீட்டினல் உபதேசித்தருளும் முனி சிரேட்டரே! அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருள்களாற் பெருகும் கீர்த்தி மிக்குடையவரே! விரதங்களுட் சிறந்த விரதமெது வென்பதை அடியேம் மயக்கறத்தெரிவித் தருள்கவெனப் பிரார்த்திக்க, சூதமாமுனிவர் மனமகிழ்ந்து கூறத் தொடங்கினர். முனிவர்களே! நீங்கள் இப்பொழுது எம்மிடம் கேட்ட இவ் விஷயத்தையே ஒவ்வோர்காலத்தில் பிரமவிட்டுணுக்களும் பார்வதிதேவியாரும் சிவபெருமானைக் கேட்டிருக்கின்றார்கள். அவர்களுக்கு அப்பெருமான் கூறியபடியே யாமும் உங்களுக்குத் தெரிவிக்கின்றோம். மாசிமாசத்து அபர பக்கத்தில் வருஞ் சதுர்த்தசி சிவராத்திரி யெனப்படும். இது உயர்வொப்பில்லாத சிவ புண்ணியகாலம். இச் சிவராத்திரியில் அனுட்டிக்கும் விரதத்தால் வரும் பயன் மற்றுங் கோடிக்கணக்கான விரதங்களாலேனும், தவங்களாலேனும் யாகங்களாலேனும் தானங்களாலேனும் வரமாட்டாது. சிவராத்திரி விரதத்தை அறியாமல் அனுட்டித்தவர்களும் யமனுலகத்திற் சேராது சிவலோகத்தைச் சேருதல் நிச்சயமென்று பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளினர்.

முன்னொருகாலத்திலே மிலேச்சதேசத்துள்ள குருத்ருஹன் என்னும்வேடனொருவன் நாடோறும் வேட்டை செய்துபெறும் மாமிசத்தினலே தன் குடும்பத்தாரைப் போஷிக்கும் இயல்புடையனு யிருந்தான். அடுத்த கிராமத்துள்ள செட்டிகளிடத்திற் சிறுகடன் பட்டிருந்தவனுகிய அவ் வேடனை ஒரு மாசிமாத அபர சதுர்த்தசியிலன்று சிவாலயத்தில்

வந்து கூடிய செட்டிகள் அங்கு வருவித்து, தங்கடனைத் தீர்க்கும்படி வலிந்து கேட்டுப் பகல் முழுதுங் கோயிலிற் றானே அவனைத் தடைசெய்து வைத்திருந்து சாயங்காலத்திலே தவணைகேட்டுக்கொண் டனுப்பி விட்டார்கள்.

அவன் கோயிலிற் கூடிய அடியவர்கள் செய்த வழிபாட்டு வகைகளுள் ஒன்றையும் விவரமாகத் தெரிந்திலனாயினும், அடுத்தடுத்துச் சொல்லப்பட்ட 'சிவ சிவ' என்னுஞ் சொல்லை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு இச் சனங்கள் இப்படிச்செய்வது ஏனோ என்னும் எண்ணமுடையனாய்த் திரும்பினான்.

பின்பு அவன், இன்றைக்கு வேட்டை செய்யாமையால் மாமிசம் இல்லையாயிற்றே! இனி யாது செய்வேன்! என்று மனநொந்து, காடுகளிலும் மலையருகுகளிலும் ஓடியோடித் தேடியும் யாதொரு மிருகமும் அகப்படாமையால் வாடி, ஒரு குளக்கரையை அடைந்து அவ்விரவில் அங்கே நீர் குடிக்க வரும் மிருகங்களை மறைந்திருந்து கொல்வதே கருமமெனத் துணிந்து, நீர்க்கரையிலுள்ள ஒரு மரச்செறிவின் இடையில் ஏறியிருந்தான். அம் மரச் செறிவினுள்ளே கீழே ஒரு சுயம்பு லிங்கமிருந்தது. அதன் பக்கத்திலே ஒரு பெரிய வில்வ மரமும் நின்றது. வில்லும் அம்புங் கையிலுடையவனாகிய அவ் வேடன் இலக்குப் பார்க்கும் வழி வெளியாதற் பொருட்டும், இலக்கு வாய்க்கும் வரையும் நித்திரையின்றியிருத்தற் பொருட்டும் வில்வ இலைகளைப் பிடுங்கிக் கீழே எறிதலும், தன் ஞாபகத்திலிருந்த 'சிவசிவ' என்னுஞ் சொல்லை விநோதமாக அடுததடுத் துச்சரித்தலு முடையவனாக விருந்தான். அவ் வில்வ இலைகள் அங்குள்ள சுயம்பு லிங்கத்தின் மேலேயே விழுந்தன. அன்று முழுதும் போசன மின்மையாலும் மாமிசந் தேடுமாசையினாலும் அவனுக்கு நித்திரை வந்திலது.

பின்பு முதலாஞ் சாம முடிவிலே சிறந்த வடிவினையுடைய ஒரு மான் அங்கே நீர் பருக வந்தது. அதனைக் கண்ட வேடன் வில்லையெடுத்து அம்பு தொடுக்கத் தொடங்கலும், உடனே அம் மான் அவனைப் பார்த்து, "நன்றாய் வாழக்கடவாய், வேடராசனே! இப்பொழுது என்னை எதன் பொருட்டுக் கொல்லப்போகின்றனை?" யென்றது. வேடன் மகா அதிசயத்தோடு அம் மானைப் பார்த்து, "என் வீட்டில் ஏதும் பொருளில்லை. இன்றைக்கு என் குடும்பம் பசியினால் வருந்துகின்றது" என்று சொல்லியபின், அன்று பகலிற் கோயிலில் விக்கிரகங்களைத் தரிசித்ததனாலும் இரவின் முதற் சாமத்தில் விழிப்போடும் பசியோடும் சிவலிங்கபூசை செய்ததனாலும் தன் பாவங்களின் ஒரு காற்பங்கு நீங்கப்பெற்றவனாய், அதனால் ஒரு சிறிது தருமக்கருத்துந் தோன்ற ஓகோ! என்னாற் காலந்தோறும் பலகோடி மிருகங்கள் கொல்லப்பட்டன. அவற்றுளொன்றாவது இப்படிப் பேசியதேயில்லை எனச் சிந்தித்து அம் மானை நோக்கி "நீ எங்குள்ளாய்? எங்கிருந்து இங்கு வந்தாய்? உன் வாக்கைக் கேட்டலிற் பேராசையுடைய எனக்குச் சொல்லு" என்றான். அது அவனை நோக்கி, "நான் முற்பிறப்பிலே சுவர்க்கத்திலுள்ள அழகிற் சிறந்த ஓர் அரமகள். அங்கே அழகிலும் வலிமையிலுஞ் சிறந்த இரணியாக்ஷன் என்னும் அசுரனைச் சந்தித்து அவனைக் கணவனாகக்கொண்டு நெடுநாள் வாழ்ந்தேன். ஒருநாள் சிவபெருமானுடைய தரிசனத்தை விரும்பிச் சந்நிதானத்திற் சென்றேன். பெருமான் என்னை நோக்கி, 'நீ நெடுநாள் என் கோயிலுக்கு வராதுவிட்டதென்னையோ' வென்றார். நான் அஞ்சி நிகழ்ந்ததைச் சொன்னேன். அவர் கோபித்து, 'நீ பூமியிலே மானாய்ப்பிறந்து தானும் மானாய்ப்பிறக்கும் அவ்வசுரனோடு கூடி வாழக் கடவாய். பன்னிரண்டு வருஷங் கழிந்தபின் ஒரு வேடன் உன்னைக்கொல்லத் தொடங்கும்போது உனக்கு முற்பிறப்பின் நினைவு உண்

டாகும். அதன் பின் நம்மைத் தரிசித்தலாற் சாபநீக்கம் பெறுவாய்' என்றார். வேடனே! இப்பொழுது உன்னைக் கண்ட பின்னரே எனக்கு முற்பிறப்பின் நினைவு உண்டாயிற்று. சுவாமி தரிசனமோ கிடைக்கவில்லை. அது நிற்க. துக்கமுடையேனும் மாமிசமில்லாதேனுமாகிய என்னைக் கொல்லவேண்டாம். கொல்லினும் உன் குடும்பத்துக்கு ஆகாரஞ் சித்திப்படாது. மிகப்பெரிதும் இளமையுள்ளதும் போதிய இறைச்சியுடையதுமாகிய மற்றொரு பெண்மான் இப்பொழுது இவ்வழியால் வரும். அது உனக்கும் உன் குடும்பத்துக்கும் போசனத்துக்குப் போதியதாகும். அன்றியும் வைகறைப் பொழுதிலே ஒரு ஆண்மானு மிங்கே வரும். மேலும் வேண்டுமாகில் யான் இப்பொழுது போய் என் பிள்ளைகளைச் சுற்றத்தாரிடத்தில் ஒப்பித்து மெய்யாகவே வருவேன்" என்று சொல்லிற்று. அவ் வார்த்தைகளைக் கேட்ட வேடன் பேரதிசயமடைந்தவனாய் ஒரு கணப்பொழுது ஆலோசித்து, அம் மானை நோக்கி, "நீயோ போகின்றாய்! இங்கே மற்றொரு மிருகம் வருதலில்லையே யானால் நானும் குடும்பமும் யாது செய்யலாம்? ஆகையால் நீ உதயகாலத்தில் வருவதாக நான் நம்பும்படி சத்தியஞ் செய்தபின் போ"வென்றான். அப்பொழுது அம் மான் சொல்லிய சத்திய வாக்குக்களாவன:—

1. எந்தவே தியன்றன் சந்தவே தத்தை
மந்திர செபத்தைச் சந்திவந் தனத்தை
சத்திய சன்மார்க் கத்தினை விடுத்துப்
பத்தி யில்லாமற் பதிதனைப் போலிக்
கிரியைகள் செய்தலின் மருவுதீ நெறியினிற்
பெரிதுசீ விப்பனோ விரவவன் பாவம்
உற்றிடு வேன்யா னுண்மை
மற்றினி வாது சொற்றவ றிடினே.

2. துன்மதி யுடையான் தூர்த்தனே வஞ்சன்
புன்மையா நாத்திகன் றுன்மதங் கொண்டோன்
பிறர்மனை விழைந்தான் மறைபகர்ந் துழன்றான்
அறிஞரை யிகழ்ந்தான் பொறைநிறை யிழந்தான்
சனன மரணவா சௌசவீட் டுண்பான்
எனுமிவர்க் குரிய இனமுறு பாவமும்
உற்றிடு வேன்யா னுண்மை
மற்றினி வராது சொற்றவ ரிடினே.

3. தந்தையைத் தாயை வந்தனை செய்யான்
அந்தமே லவருள நொந்திடச் செய்வான்
அன்பொடு தான மாற்றுகின் றவரை
வன்பொடு தடுக்கும் வன்க ணாளன்
சிவத்திர வியமொடு சேர்குருத் திரவியம்
அவத்தொடு கவர்வோ னுமிவர் பாவமும்
உற்றிடு வேன்யா னுண்மை
மற்றினி வராது சொற்றவ ரிடினே.

4. விளக்கினின் மற்றொரு விளக்குக் கொளுத்துவான்
உளத்தொரு பதத்தின்மற் றொருபதந் தேய்ப்பான்
தன்னுயர் தலைவனைத் தன்மித் திரனை
தன்னைச் சிறுவரை மன்னு பார்ப்பாரை
குருவினைப் பசுவைக் கொல்லுங் கொடியோர்
மருவுமிங் கவர்பான் மன்னுறு பாவமும்
உற்றிடு வேன்யா னுண்மை
மற்றினி வராது சொற்றவ ரிடினே.

5. பொறிவழி யுள்ளம் போக்கிடு பேதை
பிறருறு குற்றம் பேசிடு மண்ணே

நன்றிகொன் றிட்டவன் றன்றுபொய்ச் சாட்சி
மன்றினி லுரைத்தவன் வளர்கன் னிகையை
விற்பவன் கொடைக்குணஞ் சற்றிலா வுலோபி
மற்றிவர் தம்பால் மருவுபா வங்களும்
உற்றிடு வேன்யா னுண்மை
மற்றினி வாராது சொற்றவ றிடினே.

6. பெற்றதாய் தந்தையைப் பெரிதுகொல் பாவமும்
முற்றுறு பிரம கத்தியாம் பாவமும்
வேட்டைசெய் பவரின் மேவுபா வமுநஞ்
சூட்டுவார் பாவமும் உளமுற விரண்டு
பெண்டிரை வரைந்து பெரிதொருத் தியின்மேல்
கொண்டுநட் பொழுகுங் கொழுநன் பாவமும்
உற்றிடு வேன்யா னுண்மை
மற்றினி வாராது சொற்றவ றிடினே.

இவ்வாறு மான் சொன்ன சத்தியவாக்குகளைக் கேட்டு வேடன், மகிழ்ச்சியோடு வில்லையும் அம்பையுங் கைவிட்டு, அம் மானை அனுப்பிவிட்டு, முன்போல வில்வ இலைகளைப் பிடுங்கி இலிங்கத்தின்மேல் எறிதலுஞ் 'சிவ சிவ' என்று உச்சரித்தலும் உடையவனாயிருந்தான்.

பின்பு அர்த்தராத்திரியிலே மற்றைப் பெண்மான் அங்குவந்தது. அதனைக்கண்ட வேடன் வில்லை வளைத்து அம்பு தொடுக்க முயலுதலும் அம் மான் அவனைக்கண்டு அஞ்சி, தன் சகோதரியாகிய முந்தின மான் கொல்லப்பட்டது போலுமென்றெண்ணி மிகுந்த கவலையை யடைந்து, அவனை நோக்கி, "வில்லைக் கையிலேந்திப் பிராணிகளனைத்தையுங் கொல்லும் வனசர! எனக்கு ஒரு வார்த்தை சொல்வாயாக. அப்பால் என்னை கொல்லத்தகும். அதாவது இந்தவழியால் முன்னமே

ஒருபெண்மான் வந்ததா இல்லையா? உண்மையைச் சொல்லக்கடவாய்'' என்று சொல்லிற்று. உடனே வேடன் அதிசயமடைந்து, இம் மானின் வாக்கும் முந்திய மானின் வாக்கும் ஒன்றுபோல்விளங்குவதென்னை? அது தான் வாக்குத்தவருது திரும்பிவந்ததா? அல்லது இது பிறிதொன்றுதானோ? என்று எண்ணிக்கொண்டு, அம் மானின் வினவுக்கு விடை சொல்லாமல், "மானே! என் குடும்பத்தைக் காத்தற்காக பகலும் இரவும் பெரிய கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கின்றேன். இப்பொழுதே உன்னைக் கொல்வேன். நீ வேண்டுமானால் தெய்வங்களை நினைத்துக்கொள்''என்றான். அதுகேட்ட மான் அழுதுகொண்டு "வேடனே! நீ என்னைக் கொல்லு. ஆனால் ஒளியிழந்து வலியிழந்து மிக வாடியிருக்கிற என்னைக் கொன்றாலும் உனக்குப் போசனம் திருத்தியாகமாட்டாது. என்னைக் கொல்வதினால் உனக்குப் பெரிய பாவம் வருவதல்லாமற் பலன் எதும் வரமாட்டாது.பொன்னிறமான மேனியையுடைய கொழுத்த ஆண்மானொன்று இப்பொழுது இவ் வழியாகவரும். இது உண்மை. அந்த மான் உனக்கும் உன் குடும்பத்துக்கும் திருத்தி போசனஞ் செய்யத் தகுந்ததாகும்'' என்று சொல்லிற்று. அது கேட்ட வேடன் அதின் வசனங்களில் விசுவாச முடையனாகி, "மானே! நீ திரும்ப என்னிடம் வருவதாகச் சத்திய வாக்குச் சொல்லிவிட்டுப் போ'' என்றான்.அது கேட்ட மான், "வேடனே! யான்சொல்வதைக் கேள். யான் சொல்லியபடி மீண்டும் உன்னிடம் வராவிடின் அசத்தியவார்த்தைகள் கூறினோர் தாமதுகாறுஞ்செய்த புண்ணியங்களை யிழந்து எவ்வகைப் பாவத்தை அடைவரோ அவ்வகைப்பாவத்திலும்; அடிக்கடி பூமியைக் காலால் உதைப்பவர் உறும்பாவத்திலும்; விஷ்ணுபக்தி செய்துகொண்டு சிவதூஷணஞ்செய்வோரும், சிவபக்தி செய்துகொண்டு விஷ்ணுதூஷணஞ் செய்வோரும் பெறும்பாவத்திலும்; தாய் தந்தை

யர்களது வருஷாப்திகத்தை விடுத்தவன் செல்லும் பாவத்திலும்; முதலில் இதவார்த்தைகள் கூறிப் பரிதாப முண்டாக்கிப் பின்னர் வஞ்சிப்பவர் அடையும் பாவத்திலும் போகக்கடவே"னென்று சில சத்திய வாக்குகள் செய்துவிட்டு நீர் பருகிக்கொண்டு போயிற்று. பின்னும் அவன் வில்லையும் அம்பையுங் கைவிட்டு முன்போலவே அர்ச்சனை செய்துகொண்டிருந்தான்.

பின்பு மிக்க அழகும் பலமுமுடைய கொழுத்த ஆண் மானானது அங்குமிங்கும் பார்த்துப் பெண்மானின் அடிச்சுவடு நாடும் இயல்புடையதாய், விரகம் பெரிதுடையதாய் அவ் விடத்தில் வந்தது. அதனைக் கண்ட வேடன் வில்லையும் அம்பையும் எடுத்துத் தொடுத்தலும் உடனே மான் அவனைக் கண்டு, ஒகோ! என் பிராண நாயகிமாரை இவன் கொன்றுனே போலும்! ஐயையோ! மனைவியில்லாதவனுக்கு வீட்டிலாவது காட்டிலாவது யாதொரு சுகமுமில்லை, பொருளுமில்லை தருமமுமில்லை; மனைவியோடு கூடியிருக்கிறவனுக்கு ஒரு மர நிழல்தானும் நல்ல வீடென்று சொல்லத்தக்கதே; என் மனைவிமாருள் ஒருத்தி உயிர்போன்றவள். மற்றவள் உயிரையுந் தருபவள். இவர்களை யிழந்து நான் சீவிப்பதிலும் மரணமே தக்கது என்று நினைத்துக்கொண்டு வேடனை நோக்கி, "பாமிச போசனியாகிய வேடராசனே! நான் கேட்டதற்கு உண்மையான மறுமொழி சொல்லு. முன்பு இங்கே வந்த பெண் மான்கள் இரண்டையும் கொன்றுபோ இல்லையா? அவைகள் எங்கே? உண்மையைக் கூறுதி" யென்று சொல்லிற்று. வேடன் அதிசயமடைந்து, இதுவுஞ் சாதாரணமான மானன்று, ஒரு தெய்வத் தன்மையுள்ளதாகக் காணப்படுகின்றது என நினைத்துக்கொண்டு, "அப் பெண்மான்கள் இரண்டும் இங்கே வந்து உன்னையே எனக்கு இலக்காக ஒப்பித்துத் தாங்களும்

பின்பு என்னிடம் வருவதாகச் சத்திய வாக்குச் சொல்லிக் கொண்டு அந்தவழியாற்போயின. இப்பொழுது நான் உன்னை விடமாட்டேன். நிச்சயமாகவே கொல்வேன்" என்றான். அப்பொழுது மான், "நல்லது நீ நம்பும்படி அவைகள் எவ்வாறு சத்தியவாக்குச் சொல்லின?" என்றுகேட்க, வேடன் அம் மான்கள் சொன்ன சத்திய வாக்குகளை யெடுத்துச் சொன்னான். அது கேட்ட மான் மகிழ்ச்சி யடைந்து, "வேடனே! நீ இப்பொழுது என்னைக் கொன்றாலும் என்னுடைய உடம்பை உன் வீட்டுக்குத் தனியே சுமந்துகொண்டுபோதல் உன்னால் இயலாது; ஆகவே உனக்கு இந் நேரத்தில் ஆகார சித்தி உண்டாகாது. வீணே பாவந்தான் பெறுவாய், நான் போய் என் மனைவியரைச் சந்தித்துச் சுற்றத்தாருக்கும் அறிவித்துக்கொண்டு காலையில் உன் வீட்டில் வந்துசேருவேன். இப்பொழுது என்னைவிடு" என்றது. வேடன், "நீ பொய் சொல்லி என்னை ஏய்க்கிறாய். மரணத்துக்கு உடன்பட்டுத் தாமே வருபவரும் உண்டோ?" என்றான். மான், "நீ நம்பும்படி சத்தியஞ் செய்கின்றேன்" என்று சொல்ல, வேடன் "அப்படியே செய்" என்றான்.

அம் மான வேடனை நோக்கி, "நான் உனக்குப் பண்ணிய வாக்குப்படி விடியற காலமே உன்வீட்டுக்கு வராமல் விடுவேனாகில் இங்கே காட்டப்படும் பாவிகளுடையும் பாவங்கள் அவ்வளவுக்கும் நான் பாத்திரமாகக் கடவேன். கேள்: கணவனை வஞ்சிக்கும் பெண், எசமானனை வஞ்சிக்கும் அடியவன், குருவுக்குத்துரோகஞ் செய்யுஞ் சிஷன், மித்திரனுக்குத்தீங்கு செய்தவன், கோயில்களைக் குளங்களைக் கெடுத்தவன், வேத ஒழுக்கங்களை விட்ட பிராமணன், வேதங்களை நிந்தித்தவன், வேதப்பிராமணரை நிந்தித்தவன், கோட்சொல்பவன், தன் வீட்டிலே சூரியனை, விஷ்ணுவை, விநாயகரை, சுப்பிரமணிய

ரை, பார்வதியம்மையை, சிவபெருமானையல்லாமல் வேறொரு தேவனைப் பூசிக்கிறவன், பசுவைக்காலினாலே தீண்டுகிறவன், சூரியன் உதிக்கும் போது நித்திரை செய்தவன், விருந்தோம் பாதவன், உள்ளி ஈரவுள்ளி சுரைக்காய் முதலியன புசிப்ப வன், அருட்பாக்களைச் சுரபேதமாக ஓதுபவன், சித்திரவேலை வைத்தியம் வாணிபம் முதலியன செய்யும் பிராமணன், பரத் திரவியங் கவர்ந்தவன், பரதார கமனஞ் செய்பவன், நம்பிக் கைத்துரோகி, வறுமை அழகின்மை பிணிகளுள் யாதுமுடை யவனென்று கணவனைப் போற்றாது விட்ட பெண், ஏகாதசி யையும் சிவராத்திரி சதுர்த்தசியையும் முற்றிதி கலந்த நாளிற் கொண்டவன், விபூதியை அன்பொடு பூசாதவன், சந்தியாவந் தன காலத்திலும் இரதிகேளியிலும் சிவராத்திரிகாலத்திலும் போசனஞ் செய்தவன், பிறர்க்கு உதவிசெய்யாத மகா சமர்த் தனுயுள்ளவன், பகற்புணர்ச்சி செய்தவன், பர்வகாலத்திலும் விரதகாலத்திலும் புசிக்கத்தகாத பதார்த்தங்களைப் புசித்த வன், வேசியர், மதுபானஞ் செய்வோர் என்னும் இவர்கள் ஒவ்வொருவரும் பெறும் பாவங்களவ்வளவையும் விடிய உன் வீட்டுக்கு வரத்தவறினால் நான் முழுதுமடையக் கடவேன்" எனக் கூறிற்று. இவ்வாறு அம் மான்சொன்ன சத்திய வாக் குகளைக் கேட்டு மகிழ்ந்து வேடன் அனுமதிசெய்ய, அது சலபானம் பண்ணிக்கொண்டு முன்பு பெண்மான்கள் போன வழியே போயிற்று.

இங்ஙனம் விடைபெற்றுச் சென்ற அம் மான்கள் மூன் றும் சந்தித்து நடந்த விர்த்தாந்தங்களைச் சொல்லிக் கொண்ட வைகளாய், சத்திய பாசத்தாற் கட்டுப்பட்டவைகளாய் அவ சியம் அவ் வேடனிடம் போகவேண்டுமென நிச்சயித்துக் கொண்டு, குட்டிகளை நல்லவார்த்தைகளால் இதமாக அவ்விட த்திலேயே விடுத்துப்புறப்பட்டன. அவற்றுள் மூத்த பெண்

மான் தன் கணவனை நோக்கி, "இக்குட்டிகள் ஆதரவற்றவைக ளாயிருத்தலின் எவ்வாறு சீவிக்கும்? யான் முதலில் வருவே னென்று வேடனுக்குப் பிரதிக்கினை செய்து வந்தமையின் யான் மாத்திரமே போகவேண்டும். நீங்களிங்கே யிருங்க"ளெ னக்கூற, அதனைக்கேட்ட இளைய பெண்மான், "யான் உங்களிரு வர்க்கும் பணிவிடை செய்ய வேண்டியவளா யிருக்கின்றே னாதலின் யானே வேடனுக் கிரையாகப் போகின்றேன். நீங்க ளிருவீரும் இங்கே யிருக்கலா" மென்று கூற, ஆண்மிருகம அவ்விரண்டின் வார்த்தைகளையுங் கேட்டு, "யானே அவ் வேடனுக்கு இரையாகும்படி செல்வேன். நீங்கள் இவ்விடத் திலேயே யிருங்க" ளென்று சொல்லிற்று. பெண் மான்கள் அதைக் கேட்டு, "ஐயோ! நீ யிறந்தால் நாங்கள் விதவைத் தன்மை யடைந்து சீவிப்பதைக் காட்டிலும் துன்பம் வே றுண்டோ?" வெனக்கூறி, குட்டிகளை வேறு சிலமான்களிடம் விடுத்து மூன்றும் ஒன்று கூடி அவ் வேடனிருக்கும் இடத் தை நோக்கிச் சென்றன. வேடவனும் அம் மான்கள் மூன் றும் எப்பொழுது வருமோ வென்னும் எண்ணத்துடன் வழிபார்த்துக்கொண் டிருந்தான்.

சத்திய பாசத்தாற் கட்டுப்பட்டு வருகின்ற அந்த மூன் றுமான்களையுங் கண்ட வேடன் சந்தோஷப்பட்டு, ஆ! இம் மிருகங்கள் நம்மிடத்துச்செய்த பிரதிக்கினைபின்படி மீண்டும் வந்தனவன்றோ எனச் சந்தோஷங் கொண்டு தனது வில்லை டங்காரஞ்செய்தான். அவ்வாறு டங்காரஞ்செய்கையில் அவன் கையில் வைத்திருந்த சல பாத்திரத்திலிருந்து சிறிது சலமும் அம் மரத்தினின்று சில வில்வபத்திரங்களும் அம் மரத்தடியி லிருந்த சிவலிங்கத்தின்மேல் விழுந்தன. அதனால் அவன் சிவ ராத்திரி காலத்தில் நான்காம் யாம பூசை செய்தவனானன். உபவாசமும், நித்திரை விழிப்போடு நான்கு யாமப் பூசையும்

நீதிவசனக்கேள்வியம் ஒருங்கு உற்றமையினாலே அவ் வேடுவனுடைய பாவங்கள் அப்பொழுதே அவனை விட்டொழிய, நல்லறிவுடையவனாகி, ஆ! ஆ!! அறிவிற் குறைந்த இம் மிருகங்கள் தங்கள் தேகத்தால் அந்நியருக் குதவிசெய்து எவ்வளவு தன்யமாகின்றன. யான் மனுச் சனன மெடுத்துச் சம்பாதித்த புண்ணியம் யாது? பிறரைத் துன்புறுத்தி என் உடலையும் என் குடும்பத்தையும் போஷித்தேன். பிறசீவரை வருத்தி உயிரோம்பி வாழ்ந்த எனக்குக் கிடைக்கும் கதியாதோ அறியேன். இச் சரீரத்தாற் பலவகைப் பாவங்களைச் சம்பாதித்தேனன்றோ? இதுகாறுந் தீக் கருமங்களையே செய்து துக்கித்து மெனது வாழ்க்கை நிந்திக்கத் தக்கதெனத் தனக்குள்தானே நினைந்து வருந்தி; அம் மிருகங்களைக் கொல்லும்படி வில்லிற் பூட்டிய பாணத்தைக் கழற்றி அவைகளைப் பார்த்து, "ஓ உத்தமமான மிருகங்களே! நீங்கள் பரோபகார மொன்றையே கருதிப் பெரும் பேறு பெற்றீர்கள். உங்களால் யானும் சத்திய தருமத்தைக் கடைப்பிடித்தேன். இனி உங்களைக் கொல்லமாட்டேன். நீங்கள் உங்கள் வாசஸ்தானத்தை அடையுங்கள்" எனக் கூறுகையில், கடூரமனமுடையவனாயிருந்து திவ்விய ஞானத்தை அடைந்த அவ் வேடனாற் பூசிக்கப்பட்ட சிவபெருமான் அவனுடைய பூசைக்கு மனமிக மகிழ்ந்து, தெளிந்த ஞானிகளால் எக்காலமுந் தியானிக்கப்படும் ஐந்து திருமுகங்களோடும் திருவுருவத் தரிசனங் கொடுத்து, "உனக்கு வேண்டிய வரம் யாது கேட்பாயாக" என ஆஜ்ஞாபித்தருளினார். பெருமானுடைய அருள் வடிவத்தைத் தரிசனஞ் செய்த வேடன் ஞானமுடையனாய்ப் பெருங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமானுடைய திருவடிகளிற் சாட்டாங்கமாகப் பணிந்து, "எல்லாப் பாவங்களும் என்னாற் செய்யப்பட்டன. அவற்றாலுண்டாகும் தீவினைப் பயன்களை யொழித்து எளியேனை ஆட்கொண் டருளவேண்டு"மெனப் பிரார்த்தித்தனன். மகா

தேவராகிய சிவபெருமான் அவனுக்குக் குகன் என்னும் பெயரளித்து, "உன் மனத்திற் கருதிய சுகபோகங்களை யடைவாய்; நீயொரு இராசதானியையுங் காக்க வல்லவனுவாய்; உன் வமிசம் விருத்தியாகும். தேவர்களு முன்னைக் கொண்டாடத் தக்க பெருங்கீர்த்தியை யடைவாய். அயோத்தி மன்னனுகிய தசரதன் மதலையாய் விஷ்ணு இராமாவதாரஞ் செய்து உன்னிடத்தில் வந்து உன்றைப் பூசிக்கப் பெற்றுச் செல்லுவன். பின்பு முத்தியைப் பெறுவாய். உன் வமிசத்தவர்கள் என்னைப் பூசை செய்யும் விரதத்தை வகித்து மகா பலவான்களா யிருப்பார்க"ளென வரங் கொடுத்தருளினர்.

இவ்வாறிருக்க; அம் மான்களின் குட்டிகள் தாய் தந்தைகளைப் பிரிந்த துக்கத்தை ஒருவாறு தேற்றி அவர்களுக்குண்டாகும் கதியே தங்களுக்கும் கிடைக்கட்டு மெனத் தீர்மானித்து, அவ்விடம் வந்து சேர அவை எல்லாவற்றிற்குஞ் சிவதரிசனங் கிடைத்தது. அச் சிவதரிசனத்தால் அம்மிருகங்கள் அநித்திய போக போக்கிங்களை வெறுத்து மிருக தேகத்தை யொழித்துச் சுவர்க்கலோகத்தை யடைந்தன. அவ்விடம் அற்புதாசலமென வழங்குகின்றது. அத் திருப்பதியில் வியாதனுற் பூசிக்கப்பட்டமையின் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் வியாதேசுவரரென்னும் திருநாமத்தோடு மெழுந்தருளி யிருக்கின்றனர். அக் குகவேடனும் அதுமுதல் அகண்ட ஐசுவரிய முடையனுய் வாழ்ந்து, ஸ்ரீ இராமமூர்த்தியைத் தரிசித்துப் பலகாலங் கழித்து ஆயுள் முடிவில் சிவசாயுச்சியத்தை யடைந்தனன்.

அஞ்ஞானத்தாலேனும் சிவராத்திரி விரதத்தை யனுட்டிப்பவர்கள் சிவ சாயுச்சியத்தை யடைவரானுல், ஞானவான்களாய்ப் பத்தியோடு அவ் விரதத்தை யனுசரிப்பவர்கள் சிவரூபத்தை யடைவரென்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

---

# விபரிசச் சருக்கம்.

மற்றோர் காலத்திலே வேடர்களுக்கெல்லாம் அரசனாக விருந்த விபரிசன் என்பவன் இரப்பவர்களுக்குக் கைம்மாறு கருதாது மிக்க திரவியங்களைக் கொடுப்பவன், மாமிசங்களை உண்பவன், எல்லாச் சாதிப் பெண்களையும் புணருகின்றவன். இவன் கொடிய இச்செய்கைகளை உடையனுபினும், ஒவ்வொரு மாசத்தினும் வரும் சதுர்த்தசி திதியிலே, பரமசிவனைச் சங்கரவாழ்க! சம்புவாழ்க! சதாசிவ வாழ்க! வென்று சிவ நாமங்களை யெடுத்துத் தோத்திரஞ்செய்து பூசைசெய்வான். அப்பூசை முடிவில் உடம்பில் ரோமப்புளக முண்டாகப்பரம சிவனைத் தோத்திரஞ்செய்து நின்றுகொண்டு பரதசாத்திரத் தின்படி நிருத்தஞ் செய்வான்; சத்த சுரங்களும் வழுவாத கீதங்களைப் பாடுவான்; வணங்குவான். அவனுடைய சிவநேசம் இவ்வளவென்று சொல்லுந் தரத்ததன்று.

இவன் அரசு செய்பவனுய்த் தனதுசெங்கோல் எவ்விடங் களிலுஞ் செல்லவும், எவர்களுந் தனக்கு அடங்கி நடக்கவும் தீயநெறிகளை யெல்லாம் நீக்கித் தருமத்தைப் பாதுகாத்து நடந்துவந்தான். ஒருநாள் அவனுடைய மனைவியாகிய குமுதவதி என்பவள், தன் நாயகனை வணங்கி, "நாயகரே! நீர்சந்திர சூடராகிய பரமசிவனுடைய சிவராத்திரி பூசையை ஆகம விதிப்படி செய்கின்றீர். பாவத்துக்கிடமாகப்பொருந்திய மாமிசங்களைத் தின்று முறையின்றிப் பெண்கள் போகங்களையே அனுபவிக்கின்றமையாதுகாரணம்பற்றியென்பதைஅடியாள் அறியுமாறு சொல்லியருளுக"வெனவேண்டினுள். அங்ஙனம் வேண்டிய தன் நாயகியை விபரிசன் நோக்கி, "பெண்ணே!

நான் பூர்வஞ் செய்த தவப்பயனுல் இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமு மறிந்தேன். முற்பிறப்பில் நான் ஒரு நாயாய்ப் பிறந்து பம்பைநகரில் இருந்தேன். அங்கே யிருக்கும்பொழுது ஒருநாள் பம்பையென்னுந் தலத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமானது ஆலயத்திற் புகுந்து பலிக்காக வைத்த அன்னத்தை உண்ணச் சென்றேன். என்னைக் கண்டவர்கள் கல்லினுலும் தடியினுலும் அடித்துத் துரத்த, நான் பயந்து குரைத்துக்கொண்டு உயிர்தப்பிப்பிழைக்க அந்த ஆலயத்தை வலமாகச் சுற்றிக் கொண்டோடினேன். ஓடிய நான் அந்த ஆலயத்தை நீங்கிப் போவதற்கு வழிதேடிக் காணுமல் திகைத்து, மனவலியுமிளைத்துப் பலிபோடுகின்ற பீடத்தின் அருகில் நின்று சிவலிங்கப் பெருமானைப் பார்த்தேன். அன்று சிவராத்திரியாகையினுல் நிர்மலனுகிய அந்தச் சிவலிங்கப் பெருமானுக்கு, யாவருந் தரிசனைசெய்யக் கிடைப்பதற்கரிய சுடரினையுடைய தீபாராதனைமுதற் சில ஆராதனைகள் செய்வதை என் பாவங்களெல்லாம் நீங்கும்படி தரிசித்தேன். அப்பொழுது ஒருவன் வில்லை வளைத்துக் கொடிய பாணத்தைப் பிரயோகஞ்செய்ய, அது பட்டவுடனே இறந்தேன். இராக்காலத்துச் சோடசோபசாரங்களில் ஒன்றுகிய தீபமேந்திய பூசாகாலத்துப் பிரமதேவனுலும் காணப்படாத அப் பரமபதியினுடைய திருமுடியைத் தமியேன் இறக்குஞ் சமயத்திற் தரிசித்ததினுலும், அப் பரஞ்சுடர் வீற்றிருக்கும் ஆலயத்தைப் பிரதக்ஷிணம் வந்த தன்மையினுலும் இவ் வுலகத்து அரசனுகப் பிறந்தேன். திரிகாலங்களையு மறிந்தவனுனேன். பெண்ணே ! சிவராத்திரியானது உலகத்தில் இழிவுள்ள நாயாகப்பிறந்திருந்த எனக்கும் இவ்வாறுன அரசபோகத்தை அனுபவிக்கத்தக்க நல்வினைப் பயனைக் கொடுத்ததென்றுட்கொண்டு இந்தப்பிறப்பிலும் மாதம் மாதம் வருகின்ற பூருவ பக்கம், அபரபக்கம் என்னும் இரண்டு பக்கங்களிலும் பதி

னன்காந் திதியாகிய சதுர்த்தசியில், மாசிமாதத்தில் அம் மகா சிவராத்திரியில் பூசை செய்வதுபோலவே, மேன்மைபொருந் திய சிவபூசையை நித்தியத்திலும் விசேடமாகச்செய்து வரு கின்றேன். இவ்வாறு பூசித்தலாலே பாவங்கள் நீங்குமோ? என்று வினவுவாயாயின் சொல்லுகின்றேன் கேள். தேவர்க ளுக்கெல்லாம் இறைவனும் திருக்கைலாசத்திலே விற்றிருந்து வேண்டுவார்க்கு வேண்டிய வரங்களை ஈவோனுமாகிய சிவ பெருமானை ஒருதரந் தோத்திரஞ் செய்தால், அப்புண்ணியம் மலைபோலக் குவிக்கப்பட்ட விறகைத்தீப்பொறியானது நுழை ந்து சாம்பராக்கிவிடுந் தன்மைபோலப் பாவங்களை யெல்லாம் நீக்கிவிடும். ஆகையால் நீயும் பரமசிவனுடைய திருவடிகளை அருச்சனை செய்யக்கடவாய்'' என்றான்.

அப்பொழுது குமுதவதியானவள் சிரித்து, "நாயகரே! நீர் மனிதர்களுடைய திரிகாலங்களையும் அறிய வல்லீராயின், எனக்கு முற்பிறப்பில் என்ன சென்மம் உண்டாயிருந்ததோ அதனையும் அதில் நடந்தவைகளையும் சொல்லு''மென்று வின வினள். அரசன்கேட்டு, "பெண்ணே! நீ மல்லிகார்ச்சுனேசுவ ரர் வீற்றிருக்கின்ற கோயிற் புறாவாகப்பிறந்து இருந்து, ஒரு நாள் இரைதேடி ஒரு மாமிசத்துண்டை எடுத்துக்கொண்டு வரும்போது அதைக்கண்ட ஒரு பருந்து வந்து உன்னிடத்து அந்த மாமிசத்துண்டை அபகரித்துக்கொள்ளும்படி உன்னைப் பின் தொடர, நீ பயந்து அந்தக்கோயிலைப் பிரதக்ஷிணமாகப் பறந்துபோய்க் கொடித்தம்பத்தின் ஒரு பக்கத்து மறைந்திரு க்க; அப் பருந்து உன்னைக் கண்டு தன்னுடைய அலகினாலே உன்னைக்கொன்று, நீ கொண்டுவந்த அந்த மாமிசத்துண்டைக் கவர்ந்து சென்றது. துசத்தம்பத்திலிருந்து கீழே விழுந்த நீ, சிவசந்நிதானத்துவிழுந்து இறந்ததினாலும், முன்னே பிரதக்ஷி ணஞ் செய்தமையினாலும் பூமிக்கிறைவனாகிய அரச புத்

திரியாகப் பிறந்து என்னை விவாகஞ் செய்துகொண்டாய்' என்முன்.

அப்பொழுது குமுதவதி நாயகனைப்பார்த்து, "தலைவரே! என்னுடைய முற்பிறப்பு நன்முயறிந்தேன். இனிவரும் பிறப்புக்களில் நாமிருவரும் எவ்வாறு பிறப்போம்?" என்முள். "பெண்ணே! இனி வரும் இரண்டாம் பிறப்பில் நான் சிந்து தேசத்திற் பிறந்து இப்பூமியை அரசாட்சிசெய்வேன். அப்பொழுது நீ தனஞ்செயன் என்னும் அரசன்புத்திரியாகப் பிறந்து எனக்கே மனைவியாய்க் கற்பிற் சிறந்த அருந்ததிபோல வாழ்குவை. மூன்றும் பிறப்பில் நான் சவுராட்டிர தேசத்துச் செல்வமுள்ள அரசனுகப் பிறந்து அத்தேசம் முழுதும் அரசு செய்வேன். நீயும் கலிங்கதேசத்தில் கலிங்கராசன் மகளாகப் பிறந்து, எனக்கு மனைவியாகி அளவில்லாத காலம் வாழ்குவை. யான் நான்காவது பிறப்பில் காந்தார தேசத்து அரசனுகப் பிறந்து பூமியைக் காப்பேன். நீயும், மகத தேசாதிபதி மகளாகப்பிறந்து என் மனைவியாகி வாழ்குவை. ஐந்தாம் பிறப்பில் நான் அவந்தி தேசத்து அரசனுகப் பிறந்து அரசு செய்வேன். நீயும் தாருணன் என்னும் அரசன் மகளாகப் பிறந்து கல்யாண மண்டபத்து எனக்கு மாலைசூட்டுவாய். அதன் பின்பு நாங்களிருவரும் கூடி வாழ்வோம். ஆறும் பிறப்பில், நான் அத்தினபுரிக்கு அரசனுகப் பிறப்பேன், நீயும் யயாதிராசன் மகளாகப் பிறந்து எனக்கு நல்ல மனைவியாக வாழ்குவை. எழாம் பிறப்பில் நான் தமிழ் விளங்கும் மதுரையிலே பாண்டியராசனுகப் பிறந்து பதுமவன்னன் என்னும் பெயர் பெற்று, அறுபத்து நான்கு கலைஞானங்களிலும் வல்லவனுய் வாழுநாளில், நீ விதேக நாட்டரசன் புதல்வியாகப் பிறந்து வசுமதி யென்னும் பெயருடன் இருக்கும்பொழுது, உனது பிதா மந்திரிகளுடனே யோசித்து சுயம்வர மண்டப

மியற்றுவித்துஐம்பத்தாறுதேசத்துஅரசர்களுக்கும் மணவோலை எழுதித் தெரிவிப்பான். பின்பு அச் சுயம்வர மண்டபத்து ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் குழுமுவோம். நீ, அவ்விடத்துக் குழுமிய அரசர்கள் முன்னிலையில் என்னுடைய புயங்களில் வாசனையையுடைய பூமாலையைச் சூட்டுவாய். அப்பொழுது மற்றை யரசர்கள் பொறாமையுடையவர்களாய் என்னோடு எதிர்த்துப் போர் செய்து புறங்கொடுத்து ஓடுவர். நான் உன்னைத் தேரில் வைத்துக்கொண்டு மதுரையை அடைந்து, நாங்களிருவரும் இன்ப மனுபவித்தும், இந்தப் பூமியைக் காத்தும், அளவில்லாத யாகங்கள் செய்து தேவர் கடன்களைத் தீர்த்தும், சிவார்ச்சனை செய்தும், பிராமணர்களுக்குத் தானங்கள் செய்தும், நாங்கள் பூர்வம் செய்த தவவிசேடத்தினாலே ஒரு சற்புத்திரனைப் பெற்று அவனுக்கு முடிசூட்டிப் பூமிபார மெல்லாவற்றையும் அப் புத்திரனிடத்தே ஒப்பித்து, பொய்யாகிய இவ்வுடம்பெடுத்து மாயையாகிய சமுத்திரங்களை நீந்தி நீந்திக் கைகளுங் கடுத்துக் கரை சேரக்கூடாமையால், பின்னும் அந்தச் சமுத்திரங்களில் ஆழ்ந்திறந்து போகும்படியான பிறவியை யொழித்து வேதங்களின் முடிவிலிருக்கின்ற உண்மை நிலையை அறிய வேண்டுமென்கின்ற விருப்பமுள்ள மனமுடையவனாகி அஞ்ஞானத்தினால் என்னுடையதென்று புத்தி பண்ணிக் கொண்டிருந்த பெருஞ் செல்வங்களையெல்லாம் என்னுடையதல்லவென்று நீக்கிவிட்டு, உன்னுடனே போய் அகத்திய மகாமுனிவ ரெழுந்தருளியிருக்கும் பொதியமலையை யடைந்து பஞ்சாக்கினி மத்தியிலேயிருந்து தவஞ்செய்வேன். அக்காலத்து அம் முனிவர்பிரான் வந்து பிறவியைத் தொலைத்து, அறுசமயங்களுக்கும் அதீதமாகிய சிவயோகத்தை உறுதியாக எங்களுக் குபதேசிக்க; நாங்கள் அவ்வுபதேசத்தினால் சிவபெருமானைத் தியானித்

துச் சிவயோகத்திலிருந்து சிவானுபூதிபெற்று மோக்ஷத்தில் நித்தியானந்தரா யிருப்போம்.

பெண்ணே! நான் முன்னாளில் நாயுருவெடுத்து இறக்கும்பொழுது பரமசிவனைத் தரிசிக்கும் தன்மை கிடைத்ததினால், பிறப்புக்களையெல்லாம் உள்ளவா றறிந்தேன். சிவராத்திரியிலே பரமசிவனைத் தரிசித்ததினாலே மேலான பதங் கிடைத்தது. ஆதலால், நீயும் சிவராத்திரிதோறும் பரம சிவனுடைய திருவடிகளைப் பூசித்துத் தோத்திரஞ்செய்து பிறவியை நீக்கிக்கொள்ளக் கடவா"யென்று கூறினான். அவ் வார்த்தைகளைக் குமுதவதிகேட்டு சிவராத்திரியின் பலன் மிகவும் நன்மை யுடையதென்று கூறி அந் நாள்முதல் அவளுஞ் சிவராத்திரியில் பரமசிவனைப் பூசித்து வந்தாள். அவ்வாறொழுகி எழாம் பிறப்பு நீங்கினவுடன் அவ் விபர்ச னென்னும் வேடராசனும் மனைவியாகிய குமுதவதியும் ஒரே தினத்தில் முத்தியடைந்தனர்.

---

# கன்மாடபாதச் சருக்கம்.

சூரிய குலத்தரசனும் அயோத்தி நகரத்து வேந்தனு மாகிய மித்திரசகன் தன்பிரிய தேவியாகிய மதயந்தி யுடன் கூடிவாழ்ந்து அரசியற்றுங் காலத்தில், ஒருநாள் வேட்டை யாட விருப்பங் கொண்டு ஆரணியத்துக்குச் சென்றான். அங்கே தான் கைப்பிடித்திருந்த சிலையில் வைத்துக்கொடிய பாணங்களைப் பிரயோகித்துக்காட்டிலுள்ள மிருகக் கூட்டங் களை யெல்லாம் அழிக்கும்போது, அவ்வரசன் முன் ஒருதாய் வயிற்றிற் பிறந்தவர்களாய், வாட்போரில் வல்லவராகிய இர ண்டு இராக்ஷதர்கள் அக்கினிமலைபோல வந்தெதிர்த்தார்கள். தன்னெதிரில் முனைந்து போர் செய்கின்ற மூத்தவனை அவ் வரசன் வாளாயுதத்தினாற் கொன்றான். அண்ண னிறந்ததைக் கண்ட தம்பியாகிய நீசன் முதுகுகாட்டி யோடிப்போய் வஞ் சனையால் வெல்ல எண்ணங்கொண்டு மனிதவுருவங் கொண்டு அரசன் முன் தோன்றி அவன் பாதத்தில் வணங்கினான். அரசன் அவனைக்கண்டு நீவந்த காரண மென்ன வென்று வினவ, அந்த இராக்ஷதன், "மகாராஜாவே! வீரகண்டை யணிந்த உமது பாதங்களுக்குக் குற்றேவல் செய்யு மெண் ணத்துடன் வந்தே"னென்றான். அதைக்கேட்ட அரசன் சந் தோஷித்து, அவனுடைய மோச நினைப்பைச் சிறிது மறியா மல் சமையல் வேலையை அவனுக்குக் கொடுத்தான்.

பின்பு அரசன் அக்கானகத்தை விட்டு நீங்கி அந்த இராக்ஷதனுங் கூடவர, அயோத்தி நகரைச்சேர்ந்து மதயந்தி யுடன் வாழும் நாளில், பிதிர்களுக்குச் * சிராத்தஞ் செய்யும்

* சிராத்தமென்பது (தருமநெறியால் வந்த பொருளைச் சற் பாத்திரர்க்குச்) சிரத்தையாற் கொடுக்கப்பட்ட தெனப்பொருள்

நாள்வந்தது. அந் நாளில் அரசன் தன் குலகுருவாகிய வசிட்டமுனிவரை அழைப்பித்து, அன்புடன் ஆராதனைசெய்து, அமுது கொள்ள வேண்டுமென்று பிரார்த்தித்தான். வஞ்ச சகத்தோடு மடைப்பள்ளி வேலையி லமர்ந்திருக்கும் இராக்ஷதன், தன் எண்ணத்தை நிறைவேற்ற நினைந்து அம் முனிவருக்கு ஓர் பொற்பாத்திரத்திலே அமுதத்துடன் நரமாமிசத்தைப் படைத்தான். அம் மாமிசம் நரமாமிச மென்பதைத் தம்முள்ளத்திலறிந்த தவ சிரேட்டரான வசிட்ட

---

படும் வடமொழியேயாம். பாவத்தால்வந்த பிறன்பொருளைக் கொடுத்தால், தருமம் பொருளுடையார் மேலும் பாவம் பொருள் கொடுத்தார் மேலும் நிற்கும்.

சிராத்தமானது மாதா, பிதா, பிதாமஹர், பிரபிதாமஹர், பிதாமஹி, பிரபிதாமஹி, காருண்யபிதிர் ஆகிய எழுவருக்கும்; இஷ்டபந்துக்கள், குரு, குரு மனைவி முதலியோருக்கும் விசுவாசத்துடன் செய்யத்தக்க ஓர் புண்ணியக் கிரியையாம்.

இக் கிரியை வேதங்களாலும் சிவாகமங்களாலும் விசேஷமாயெடுத்துக் கூறப்பட்டுள்ளது. சைவாகமங்களிற் கூறப்பட்டுள்ளது சைவ்சிராத்தம். வேதம் பொது நூலெனவும், சைவாகமம் சிறப்பு நூலெனவும் அங்கீகரிக்கப்பட் டிருத்தலால் சைவசிராத்தமும் வைதிக சிராத்தத்திற்கு அந்நியமன்று.

சிராத்தமானது முன் குறிக்கப்பட்ட பிதிர் முதலியோர் திருப்தியின் பொருட்டுச் செய்யத்தக்கது. அவர் முத்தியடையாது கர்மவசத்தால் தேவகணத்தின்பாற் பட்டுளரேல் அவருக்கு அக்கினி மூலமாயும், அசுரர்பாற் பட்டுளரேல் தக்ஷிணைமூலமாயும், மானுட சாதியர்பாற் செனித்திருப்பரேல் மானுட போசனத்தாலும், பிசாசத்துவமடைந்திருப்பரேல் காகபலியினாலும், பிரேதத்துவ மடைந்திருப்பரேல் அன்னம் முதலியவற்றைச் சிதறுதலினாலும், யமலோகத்திருப்பரேல் பிண்டத்தினாலும், நரகத்திருப்பரேல் திலதருப்பணத்தினாலும் திருப்தி பெறுவரெனச் சிவாகமங்கள் கூறுதலால் நாம் நன்றி யறிவுடையோமெனின், இச் சிராத்த கருமத்தை நிறைவேற்றுதல் இன்றியமையாமையாம்,

முனிவர், அரக்கன் செய்த வஞ்சகத்தை அறியாதவராய், மனங்கொதித்து அம் மன்னனைப் பார்த்து, "சிராத்த காலத்தில் இவ்வித அக்கிரமமான செய்கையை நீ செய்ததினாலே காட்டினிற் சஞ்சரித்து நரமாமிசத்தை உண்ணும் அரக்கனாகக் கடவை" யென்று சபித்தார். அங்ஙனஞ் சாபமிட்ட முனிவர் தாம் கொண்ட கோபம் நீங்க அரக்கன் செய்த வஞ்சனையையறிந்து, அரசனை நோக்கி, "மன்ன! இக் குற்றம் உன்னால் நேரிட்ட தன்றென்பதை உணராமல் நான் கொடுத்த சாபத்தைப் பன்னிரண்டாம் வருடத்திற் தீர்ப்பா" யென்று சொல்லினர்.

அவ் வார்த்தைகளைக் கேட்ட அரசன் மிகுந்த கோபமுடையவனாகி, வசிட்ட முனிவரை நோக்கி, "குற்றஞ் செய்யாத என்னை அரக்கனாகக் கடவையென்று சபித்த உமக்கும் இதோ! கொடியசாப மிடுகிறே" னென்று சாபநீரைக் கையிலேற்றனன். அரசன் மனைவியாகிய மதயந்தி அதைக் கண்டு மனங்கலங்கி, "மன்னுயிரைக் காக்கக் காவல்பூண்ட அரசனே! பெருமைவாய்ந்த அரசர்களுக்குள் ஆசாரியரைக் கோபித்தவர்கள் யாருமில்லையே. ஆதலால் அதிகரித்தெழுகின்ற கோபத்தைத் தணிப்பது கட" னென்று வேண்ட, அவளுடைய வேண்டுதலுக்கிரங்கிய அவ்வரசன் தான் கையிலேற்ற சாபநீரைத் தன் காலில்விட, செந்தாமரைமலர் தீயிற்படிந்ததுபோல் அரசனுடைய கால்கள் அப்பொழுதே கறுத்துக் * கன்மாட

* கன்மாடம் - கறுப்பு. இவனே உதிரனென்னும் பெயரையுடைய அரக்கனாகி உழன்றிருந்தனனென்றும்; விசுவாமித்திர முனிவர் வசிட்டமுனிவர்பால் வைத்திருந்த உட்பகையினால் அவர் சந்ததியை யழிக்கத் துணிந்து சத்தி முனிவர் முதலிய நூற்றுவரையும் மாய்த்து விடும்படி அவ்வுதிர னென்பவனுக்குப் பணிக்க; அவன் அவ்வாறே முடித்தனனென்றும் சீகாளத்தி புராணம் கூறுகின்றது. சைவசம்பிரதாய வழக்கறிந்தார் இதை இழுக்கெனக் கொள்ளார்.

பாதனும் நீக்குதற்கரிய குருவின் சாபத்தால் ராக்ஷதரூபங் கொண்டு ஆரணியத்திற் போய்ச் சேர்ந்தான்.

இங்ஙனம் கன்மாடபாதன் அடர்ந்த காடுகளிலும் உயர்ந்த சிகரங்களையுடைய மலைகளிலும் வசிக்கும் மிருகக் கூட்டங்களைக் கொன்று புசித்து, சரீரங்களுக்கெல்லாஞ் சுடுகாடென்று சொல்லத்தகுந்த தன் வயிற்றை நிரப்பிக் காலங் கழிக்கு நாளில்; புதிதாக விவாகஞ்செய்த இளமைப்பருவமுடைய தன் மனைவியுடன் ஓர் இருடி குமாரன் அவ் வரக்கனுலாவும் காட்டு வழியே சென்றான். அங்ஙனஞ் சென்ற இருடிபுத்திரனைக் கண்ட இராக்ஷதன், வாள்போன்ற கோரப்பல்லும் பிலத்துவாரம்போன்ற வாயும் தோன்றும்படி நகைத்து, மிகுத்திருக்கின்ற தன் பசியைத் தணிக்க வந்தானென்று நினைக்குந்தோறும் சந்தோஷம் தனக்குள்ளே பொங்க, அவ் விருடி புத்திரனுடைய உதிரத்தைக் குடிக்க விரும்பிப் புலி ஓர் பசுக்கன்றைப் பிடித்துக்கொண்டதுபோலக் கோபத்தோடு அவ் விருடி புத்திரனைப் பிடித்துக் கொலை செய்யத் தொடங்கும்போது; அதைக் கண்ட அவ் வேதியன் மனைவி பயந்து நிலைதளர்ந்து கைகளை நெரித்துக்கொண்டு கண்ணீர் சொரியச் சோர்ந்து, சூரியகுலத் துதித்த மன்னவனே! மதயந்தி அணையும் பொன்மலையை யொத்த அழகிய மார்பனே! எனப் பலவாறு துதித்து, "யாவராலும் விலக்கக்கூடாத வலியையுடைய வினையினால் இவ்வுருவத்தைப்பெற்றனை. நீ இராக்ஷதகுலச் சந்ததியிற் பிறந்தவனன்று. ஆதலால் என் நாயகனைக் கொல்வது உனக்குத் தகுதியன்று. பிற உயிருக்கு உதவிசெய்வது உங்கள் குணமன்றோ! பகைவரை வெல்லும் வெற்றியையுடைய வேலாயுதம் ஏந்தும் அரசனே! என் கணவனிறப்பின் யானு முயிர்விட்டு விடுவேன்" னென் றிவ்வாறு தொழுதிரந்து உயிர்ப்பிக்ஷை தரும்படி கேட்டனள்.

இங்ஙனம் வருந்திக் கூறிய அவ் வேதியன் மனைவியின் வார்த்தைகளை அவ்விராக்கதன் மனதிலேற்றுக் கொள்ளாதவனாய் அவ் விருடி புத்திரனைக் கொன்று, மாமிசத்தை யுண்டு, உதிரத்தைக் குடித்து, நிணங்களையும் குடர்களையும் மென்று தின்று, எலும்புகளையெல்லாம் கழித்து, அவன் மனைவி யெதிரே வாயினால் உமிழ்ந்து விட்டனன். ஐயையோ! அப் பெண் மணி யாது செய்வாள்? அவ்விராக்கதன் உமிழ்ந்து விட்டவைகளை யெல்லாம் அவள் எடுத்துக்கொண்டு காட்டுத்தீயில் அவற்றைப்போட்டு அக்கினி தேவனை வணங்கி, இவ்வாறு அதிபாதகத்தைச் செய்த இப் பாதகன் சாபந்தீர்ந்து தன்பதியிற் சேர்ந்து மதயந்தி முதலிய தன் தேவிமார்களைத் தழுவும்பொழுது உயிர் மாண்டுபோகக் கடவனென்று கொடிய சாப மிட்டுத் தானும் அத் தீயில் விழுந்து இறந்துபோயினள்.

பின்பு அவ்விராக்கதனும் அவ் வனத்திலேயே சஞ்சரித்துக்கொண் டிருக்கும்பொழுது வசிட்ட முனிவருடைய சாபம் நீங்க, அவ்வரசன் முன்போல மன்மதனும் ஆசைகொள்ளத்தக்க தன் பழைய வுருவத்தை யடைந்து, விரைந்து அயோத்தி நகரிற் சேர்ந்து, கலவியின்ப மனுபவிக்க ஒரு ஆண் யானையானது கிடையை விரும்பித் தன் பிடி தங்குமிடத்தைத் தேடிச் செல்வதுபோல அந்தப்புரத்தை யடைந்து மைதீட்டிய கண்களையுடையவளாகிய மதயந்தியை அணுகினான். மதயந்தி தன் கணவனுடைய குறிப்பை யறிந்து அவன் செய்கையைத் தடுத்து, “அரசனே! உமக்குச் சம்பவித்த கொடிய சாபத்தை நீர் சிறிதும் அறிந்திலீர். நீர் இராக்கதனாய் அடர்ந்த காடுகளெங்கும் ஆகாரத்தை விரும்பித் திரியும்போது அங்ஙனம் அகப்பட்ட ஒரு இருடி புத்திரனைக் கொன்று புசித்தீர். அக் கொடிய செய்கையைக்கண்ட அவனுடைய மனைவி ஆற்றெணுத் துயரடைந்து உமது வரலாறு

களைச்சொல்லி யிரந்தும், நீர் கேளாது அவளுடைய நாயகனைக் கொன்றதினால் அவள் கோபங்கொண்டு நீர் இவ்வயோத்தி நகரைச் சேர்ந்து உமது மனைவியரைச் சேரும்பொழுது இறந்துபோகக் கடவீரென்று தீயில் விழுந்திறந்தாள், அவ்வாறு சாபம் நேரிட்டிருக்கின்றபடியினால் எங்களை அணைதல் உமக்குத் தகாதென்று கூறினாள். இவ் வார்த்தைகளைக்கேட்ட கன்மாட பாதனாகிய மன்னவன், பசியினால் வருந்திய ஒருவன் பொற்பாத்திர மொன்றில் அன்னமிடப்பெற்றும் உண்ணுதற் குபயோகமான உறுப்புக்க ளில்லாதவ னாயினாற்போல மிக்க துன்பமடைந்து: பெண்ணோடு கூடி இன்பமனுபவிக்கப் பெறாதவர்கள் புத்திரர்களைப் பெறாதவர்களாவார்கள், அதனால் இருமையினும் பயனற்றவர்களு மாகின்றனர், சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலுள்ள யாவரும் ஒருங்கு கூடிவந்து பாதங்களிற் பணிபத்தக்க வளங்களெல்லாம் பெற்றிருப்பினுமென்? அல்லது தேவேந்திரன் முதலான தேவர்களின் பதங்களிலிருக்கும் பேறுகளைப் பெற்றாலுமென்? புத்திரரில்லாமல் வாழ்வது வாழ்வல்லவே எனப் பலவாறு தன் மனதிலெண்ணித் துன்புற்று, துறவெய்தினும் நம் அரசியல் குன்றுமேயென்பதையும் குறியாதவனாய் வனத்தை யடைந்து பெருமைபொருந்திய தவஞ்செய்வதே முறைமையென்றெண்ணி இல்வாழ்க்கையைத் துறந்து காட்டைச்சேர்ந்து அரியதவத்தைச் செய்தான். அவ்வாறு தவஞ்செய்யு மரசன், பிறைபோல்வளைந்த தந்தங்கள் பிரகாசிக்கவும் கண்களிலிருந்து தீப்பொறி சிந்தவும் சீறிக் கரியவிடமானது விரைந்து தொடர்வதுபோல ஒரு பேய் மகள் தொடர்வதைக்கண்டு அதன் காரணத்தை அங்குள்ள முனிவர்களிடம் வினவினான். முனிவர்கள் அரசனைநோக்கி, "மன்னனே! நீ முன் இராக்கதனாய்க் காட்டிற் சஞ்சரிக்கும்போது ஓர் இருடி புத்திரனைக் கொன்று சம்பாதித்துக் கொண்ட பாவமே இப்போது பேயாக வந்து

உன்னைப்பற்றிக்கொண்ட"தென வுரைக்கக்கேட்ட அரசனும் அப் பாவத்தைத் தொலைக்கச் சேதுமுதலிய திவ்விய தீர்த்தங்களில் முறைப்படி மூழ்கியும் பல ஆலயங்கடோறுஞ் சென்று விதிப்படி தரிசனஞ்செய்தும் தனக்கு நேர்ந்த பாவந்தொலையாதிருப்பதைக் கண்டு மிதிலை நகரத்துக்குச் சமீபத்திலிருக்கும் ஒரு சோலையிற் சேர்ந்து கவலைகொண்டிருந்தான்.

அரியதவத்தைச் செய்கின்ற பல முனிவர்கள் அருகிற் சூழ்ந்துவரக் கௌதம ரிஷியானவர் அங்கே துன்பத்தோடிருக்கும் அரசன் முன் தோன்றினர். அம் முனிசிரேட்டரைக் கண்ட மன்னவன், மிக்க சந்தோஷமுடையவனாய்ப் பலவாறு வணங்கித் துதித்தான். அங்ஙனம் வணங்கிநிற்கும் அரசனைக் கௌதம முனிவர் அருளேக்கஞ்செய்து, வேந்தனே! செல்வம் பொருந்த க்ஷேமமாயிருக்கின்றனையோ வென்று வினவ, அவ்வரசன், "சுவாமி! தேவரீருடைய கிருபையைப்பெற்றவர்களுக்குத் துன்பங்கள் ஒருகாலத்தும் நேரிடா. ஆயினும் அடியேனுக்குற்ற துன்பமொன்றுண்டு. எங்கள் குலகுருவாகிய வசிட்டர் முன்னாட் கூறிய சாபத்தினால் யான் கொடிய கொலைத்தொழில் செய்யும் இராக்கதனாகி ஒரு பிராமணனைக் கொன்ற பாவமானது ஒரு பேயாகி ஆதரவற்ற எளியேனைப்பற்றித் தொடர்தலினால் அப் பாவத்தைத் தீர்க்க நினைந்து அளவில்லாத யாகங்கள் செய்தேன். பற்பல ஸ்தலங்கடோறுஞ் சென்று யாத்திரை செய்தேன். இவ்வாறு அநேக காலந்திரிந்து உடலிளைத்ததே யல்லது என்னைப்பற்றிய பாவந் தொலையப் பெற்றிலேன். இன்று தேவரீருடைய திருமுகக் கிருபையைப் பெற்றேன். அதனால் என் பாவமும் நீங்கியது. இனி யடியேன் கடைத்தேறும்படி கிருபை செய்தருள்க" வென்று அவர் பாதத்தில் வணங்கினன். கௌதமமுனிவர் மனமிரங்கி, "அரசனே! நீ பயப்படாதே. திரிநேத்திரங்களை

யுடைய ஒப்பற்றமுதல்வராகிய சிவபெருமானை அவர்விரும்பி விற்றிருக்கும் கோகன்ன மென்னுந் தலத்திற் சென்று மெய் யன்போடு தரிசிப்பாயாகில் நீ கூறிய பாவம் மாத்திரமன்று, உன்னைப் பந்தித்துள்ள சகல பாவங்களும் சாபங்களும் நீங் கும். அம் மகா க்ஷேத்திரத்தின் மகிமையைச் சுருக்கிக் கூறு கின்றேன் கேட்பாயாக. முன்னாளில் இலங்கை வேந்தனாகிய இராவணன் கைலாசத்தை யடைந்து அரிய தவஞ்செய்யும் பொழுது பரமசிவன் அவனுடைய தபசுக்கிரங்கி, ஒரு சிவ லிங்கத்தை அவ்விராவணனிடங் கொடுத்தருளி இச் சிவலிங் கத்தை உனக்குச் சொந்தமான இலங்கையில் ஸ்தாபித்துப் பூசித்து வருவையானால் அந் நகர் ஒருபோது மழியமாட் டாது. தேவேந்திரன் முதலிய தேவர்களும் பிரம விட்டுணுக் களும் உன்னோடு எவ்வகைப் போர் செய்யினும் அவர்களுன் னை வெற்றிகொள்ள மாட்டார்கள். நீ தேர்மீதேறிச் செல் வதை விட்டு நடந்து இச் சிவலிங்கத்தைக்கொண்டு செல்வ மிகுந்த உன் பட்டணத்துக்குச்சென்று அங்கே அதைத் தா பிக்கக்கடவாய். பூமியின்மற் றெவ்விடங்களிலாயினும் அதை வைக்காதே. வேறிடத்தில் வைப்பாயானால் பின் அதை யெடுக்க உன்னால் முடியாதெனக் கட்டளையிட் டருளினார். இராவணன் எம்பெருமானைப் பலவாறு தோத்திரஞ் செய்து அச் சிவலிங்கத்தைப் பெற்றுக்கொண்டு தன் பட்டணத்தை நோக்கி வழிநடந்தான். இவ்வுண்மையை யறிந்த பொன் னுலகத்தோர் தமக்கு ஆபத்து வருமேயென்று யோசித்து ஐந்து கரங்களையுடைய விநாயகக் கடவுளிடத்தே போய்ச் சேர்ந்து, தோத்திரஞ்செய்து, எம்பெருமானே! பரமசிவன் கொடுத்தருளிய சிவலிங்கத்தை இராவணன்கொண்டுபோய்த் தன் இலங்கை நகரிற் றாபிப்பானே யாயின் எவராலும் அந் நகரையும் அவனையும் அழித்தல் முடியாது. ஆதலால் அதை இக்கணமே தடுத்தருளல் வேண்டுமெனப் பிரார்த்தித்தார்

கள். தேவர்களது விண்ணப்பத்துக் கிரங்கிய மூத்த நாயனார் வருணனை ஏவி, இராவணனுடைய வயிற்றில் நீர் நிறையச் செய்ய, இராவணன் நீருளேவால் அதைப் பரிசனஞ் செய்யச்செல்லுமுன் விநாயகக் கடவுள் அவனெதிரே ஓர் பிராமண ரூபங்கொண்டு தோன்றினர். அவ் வேதியரை இராவணன் கண்டு, பெருமையுடைய பிராமணரே! சலபரிசனஞ் செய்துவிட்டு யான்வரும் வரைக்கும் இச் சிவலிங்கத்தை உமது கரங்களில் வைத்திருமென்று கேட்க, அவ் வேதியர் இராவணனை நோக்கி, இலங்கைவேந்தே! யான் இச் சிவலிங்கத்தை யேந்திக்கொண் டிருக்கும் சத்தியுடையனல்லேன். ஆதலான் மூன்றுமுறை யழைப்பதற்குள் நீ வாராவிடின் என் கரங்களிலிருக்கும் சிவலிங்கத்தைப் பூமியில் வைத்து விடுவேனென்றார். இராவணன் அதற்கிசைந்து சிவலிங்கத்தை அவ் வேதியரிடங்கொடுத்து நீர்தொட அப்புறஞ் சென்றான். சற்று நேரத்தால் பிராமண வடிவங்கொண்டிருக்கும் விநாயகப் பெருமான் 'இராவணா இங்கேவா' என மூன்றுமுறை யழைத்தும் அவன் வாராமையினால் அச் சிவலிங்கத்தைப் பூமியில் வைத்தனர். அதிக விரைவோடு நீர் தொட்டுவந்த இராவணன் சிவலிங்கம் பூமியிலிருக்கக்கண்டு அதைத் தன் கரங்களாலெடுக்க முயன்றும் கூடாமையைக் கண்டு இது "மகாபலலிங்க" மென்றான். சிவநேசத்தில் மிகுந்தவனாகிய இராவணன் சொன்ன திருநாமமே அச் சிவலிங்கப் பெருமானுக்கு யாவராலும்வழங்கலாயிற்று. அவன் பின்னும் தன் கரங்களாற் பலங்கொண்டமட்டும் தூக்கவே, அச் சிவலிங்கம் குழைந்து நீண்டது. பசுவின்காதுபோல் நீண்டமையினால் அத் தலத்துக்குக் கோகன்னம் என்னும் பெயருண்டாயிற்று. இராவணன்கோபமிகுதியினால்வேதியர்வடிவங்கொண்டிருந்த விநாயகமூர்த்தியின் சிரசிற் குட்டினான். விநாயகக்கடவுள் உடனே விசுவரூபங்கொண்டுதமது துதிக்கையினால் இராவணனைப்

பிடித்துப் பந்தாடினர். இராவணன் துன்பஞ் சகிக்கலாற்று பெருமானை நோக்கி, பேதைமையினாற் றேவரீரை இன்னு ரென் றறியாது செய்த அபசாரத்தைப் பொறுத்தருள வேண்டும் புண்ணியா! எனப் பிரார்த்திக்க, எம்பெருமான் அவனைப் பூமியில் விட்டு நீ செய்த குற்றத்தை நாம் பொறுத்துக் கொள்ளும்படி உனது இருபது கரங்களாலும் பத்துத் தலைகளிலும் குட்டிக் கொள்ளக் கடவாயென்று கட்டளையிட, இராவணன் அவ்வாறே குட்டிக் கூத்தாடுவதைக்கண்ட யானைமுகக் கடவுள் திருவுளமகிழ்ந்து இன்றுமுதல் எம்முடைய கிருபாநலத்தை விரும்புவோர் உன்னைப்போலத்தங்களிருகரங்களாலும் சிரத்திற் பொருந்தக் குட்டி வணங்குவார்களாகில் நாமவர்க்கு மகிழ்ந்து அருள் செய்வோமெனத் திருவாய் மலர்ந்து அந்தர்த்தானமாயினர். இராவணனும் இலங்கையை யடைந்தனன். விநாயகமூர்த்தியாற் பிரதிட்டை செய்யப்பெற்ற அத் தலத்தில் வீற்றிருக்குங் கோகன்ன நாதருடைய திருவடிகளை அட்ட திக்குப்பாலகர், விஷ்ணு, பிரமா, தேவேந்திரன், மருத்துவர், விஞ்சையர், முனிவர்கள், நாகலோகத்தார் முதலாயினோர்கள் எந்நாளுந் தொழுவார்க"ளென்றிவ்வாறு அக் கோகன்னத்தின் பெருமைகளைக் கௌதமமுனிவர் கன்மாட பாதனென்னும் மித்திரசகனுக்குத் தெளிய வுரைத்துப் பின்னும் அவனை நோக்கி, அரசனே! நாம் மாசிமாச சதுர்த்தசியாகிய சிவராத்திரியில் நம் பெருமானாகிய மாபல லிங்கநாயகரை வேத முறைப்படி தரிசித்து இற்றைத்தினம் சனகராசன் செய்கின்ற யாகத்தைக் குறித்து மிதிலை நகரை நோக்கிவரும்பொழுது ஒரு அதிசயத்தைக் கண்டோம். அதைச் சொல்வோம் கேட்பாயாக வென்று பின்வருமாறு கூறுவாராயினர்.

---

# சவுமினிச்சருக்கம்.



"மித்திரசகனே! நாமும் நம்மைச் சூழ்ந்த முனிவர் சிலரும் ஓர் ஆலமர நீழலைச் சேர்ந்திருந்தபொழுது கருங்காக்கை போன்ற நிறமும், புழுக்கள் சரீரமெங்கும் நெளியும்படி வியாபித்திருக்கும் புண்களும், குஷ்ட வியாதியு முடையவளாய்; உடல்பதற, புண்களிலிருந் தொழுகும் இரத்த தாரை துர்க்கந்தமாக நாற, சுரநோயும் சூலைநோயும் உயிரை வருத்த, பார்வையற்றவளாய், கிழத்தன்மை யுடையவளாய், பார்ப்போர் அருவருத்துத் தங்கள் கண்களை மூடிக்கொள்ள வழி நடந்துவந்த ஓர் நீசஸ்திரி, க்ஷய நோயதிகரித்து வருத்த அக்கினிமயமாய்ச் சுடுகின்ற அவ் வனத்தில் விழுந்தாள். அங்ஙனம் விழுந்த அப் புலைச்சியின் உயிர் உடலைவிட்டு நீங்குந் தருணத்தில் அவளடைந்த அவஸ்தைகளை நாம் கவனித்துக் கொண் டிருக்குங்காலையில், சோதிப்பிரகாச முடைய பொன் விமானத்தோடு ஆகாயத்தினின்று பலதேவகணங்கள் பூமியி லிறங்குவதைக் கண்டு, அவர்களை வணங்கி, நீவி ரிவ்விடம் வந்ததற்குக் காரணம் யாதென வினவினோம். அக் கணத் தலைவர்கள் எம்மை நோக்கி, இருடிகளே! பரமசிவனுடைய ஏவற்படி இந் நீசஸ்திரியைக் கொண்டுபோக வந்தோமென் றார்கள். நாம் ஆச்சரிய மடைந்து பின்னும் அத் தேவகணங்களைப் பணிந்து, இழிந்த பிறப்பினை யுடையவளும், நேத்திரங்களற்றவளும், பரமசிவத்தின் நிலைமையையும் அவருடைய மெய்யன்பர்களுடைய நிலைமையையும் அணுவளவேனுந் தியானியாதவளும், புண்ணியத்திற் சிறிதும் விருப்பற்றவளுமாகிய இவளை நீங்கள் சிவலோகத்துக்குக் கொண்டு போவதற்குக் காரணம் யாதென வணக்கத்தோடும் கேட்டனம்.

அதற்கு அக் கணத்தலைவர்கள் பின் வருமாறு தெரிவித்தார்கள்.

'முனிவர்களே, இவள் முற்சனனத்திற் கேகய நாட்டில் பிராமண குலத்திற் பிறந்து, சவுமினி யென்னும் பெயரையுடையவளாய், அழகிற் றனக்கிணை யற்றவளாய் விளங்கினாள். இவள் மங்கைப் பருவ மடையவே, விதிப்படி ஓர் பிராமணனுக்குக் கன்யாதானஞ் செய்து கொடுக்கப்பட்டாள். அக்காலந் தொடங்கித் தன் கணவனோடு மிக்க அன்பு காட்டி இன்பநுகர்ந்து வாழும் பொழுது, ஊழ்வலியால் நேர்ந்த நோயினால் நாயகனிறக்க, அவள் மிகத்துன்புற்றுச் சிலநாள் தன் கணவனை நினைந்து அழுது புலம்பி, காமநோயதிகரித்தமையால் மனந்தேறிப் பர புருடனைச் சேர்ந்து துன்மார்க்க முடையவளாய்க் கருப்பமெய்தியதை யறிந்த அவளுடைய சுற்றத்தவர், அவளிங்கிருப்பின் குலத்துக் கீனமாகுமென நினைந்து அவளைஊரைவிட்டுத் துரத்திவிட்டனர். பின்புஅம்மாது மிகுந்ததுக்கத்தோடு காட்டிற்சென்று திரியும் போது தூர்த்தனாகிய வேளாளனொருவன் கண்டு அவளிற் காதல் கொண்டு தன் வீட்டுக்கு அவளை அழைத்துச்சென்று தன் பிரிய மனைவியாக வைத்திருந்தனன். இருவரும் மதுவுண்டு புலாலருந்திக் கலவியின்ப மனுபவித்துக் குழந்தைகளைப் பெற்று வாழ்ந்தனர்.

ஒருநாள் தன் விடபுருடன் யாதோ காரியார்த்தமாகப் பிறவூருக்குச்செல்ல, தனியேவீட்டிலிருந்த அம் மாது இராப்பொழுது வரக் காமவிச்சை மேலிட, மதுவருந்தி மாமிசம் புசிக்க இச்சைகொண்டு, தன்வீட்டின் புறத்துள்ள தொழுவத்திற் சென்று கள்வெறியால் வெள்ளாடென நினைத்து பசுவின் இளங்கன்றின் தலையை யரிந்து வீட்டுக்குக் கொண்டுசென்று தீப வெளிச்சத்தில் அதனிறைச்சியை

யரிய வெத்தனிக்கும்போது,பசுக்கன்றின் தலையெனவறிந்து, அந்தோ! கொடிய பாவத்துக் காளானேனே, சிவ! சிவ! யாது செய்வேன்! என்று சொல்லிச் சோர்வடைந்தனள். வேறு பல பாவங்களைச் செய்பவளாயினும் பசுக்கன்றின் தலையை யரிந்தது மகா கொடிய பாவமெனச் சென்மாந்தர புண்ணியத்தால் உணர்ந்து, அவ்வுணர்ச்சி தோன்றியபோதே வேறு சிந்தையற்றுச் சிவசிவ வென்னுந் திருநாமத்தை யுச்சரித்துக்கொண்டு, அறிவைக் கெடுக்கும் வெறிப்பதார்த்தங்களை யருந்துவதினால் பெருந் துன்பமே நேருமென வருந்தித் துயரடைந்து சிவபெருமானுடைய திருவடிகளையே தியானஞ் செய்தவளாய், இரண்டு நாழிகைவரையில் உட்கார்ந்தபடியே யிருந்தனள். அப்பால் வினைவழியே அச் சிந்தை மாற மாமிசந் தின்னு மிச்சையிழுப்ப, அக் கன்றின் மாமிசத்தை நீக்கிவிடாது அதையரிந்து சமைத்து உண்டு எலும்பு முதலியவற்றைத் தூரத்தே யெறிந்துவிட்டு, தன் பசுக்கன்றைப் புலி பிடித்துக் கொண்டுபோய்விட்டதென அயலவரை நோக்கி யழுது வாடினாள். அயலூருக்குச் சென்றிருந்த அவளுடைய கணவனும் அடுத்த நாள் வந்து அக் கொடியவளின் செய்கையை யறிந்து நடுக்க மடைந்தும், கலவி யொன்றை விரும்பி அவளோடு கூடி வாழுங்காலத்திலே, அப் பெண் இறந்தனள். கொடிய பாதகங்களைச் செய்தும் ஓர்கால் தான் செய்யுந் துர்க்கருமங்களை யுணர்ந்து அஞ்சிச் சிவசிவவெனச் சொல்வதற்கு அவளிடத்தே எவ்வகைப் பூர்வ புண்ணிய மிருந்ததோ அப் புண்ணிய வசத்தால் நரகிடை வீழ்த்தப் படாது இப் பிறவியில் புலையர் குலத்திலே நேத்திரங்க ளற்றவளாய்க் குரூப ரூபமுடையவளாய்ப் பிறந்தனள். பின்பு பெற்றோ ரிறந்து போக, வியாதி யொருபுறம் வருத்த, தன்னை விவாகஞ் செய்துகொள்வாரு மின்றிப் பசி நோயினாற் புலைச் சேரிகளில் இரந்துண்டு கிழத்தன்மை யடைந்தனள்.

பசியினாலும் நோயினாலும் வருந்திச் சோர்வுற்றிருந்த ஒருநாள், அது பரமசிவனுக்குரிய சிவராத்திரி காலமாதலால் கோகன்னத்துக்குச் செல்லுகின்ற கூட்டத்தாருடன் தானுஞ் சேர்ந்து புறப்பட்டுச் சென்றனள். அங்ஙனஞ் சென்று அத் திவ்ய க்ஷேத்திரத்தை யடைந்து ஓர் வீதியிலுட்கார்ந்து, பசி மிக, கண்களில்லா எனக்கு அன்னங் கொடுங்களென்று இரண்டு கரங்களையு மேந்தி இரப்பாளாயினள். அவ் வேளையில் வழிப்போக்கனொருவன் இறுமாப் புடையனாதலால், தான் கொண்டுபோன வில்வத் தழைகளிற் சிலவற்றை யெடுத்து அன்னமென்று சொல்லி யவளுடைய கையிற் போட்டான். அங்ஙனந் தன் கரங்களில் விழுந்த வில்வத் தழைகளை உண்ணும் பதார்த்த மல்லவென நினைத்து அவள் அவற்றைப் புறத்தே யெறிதலும், அத் தழைகள் பக்கத்தே யிருந்த சிவலிங்கத்தின் திருமுடியில் ஒருவாறு பொருந்தின. இவ்வாறு அவள் ஆகாரமும் நித்திரையு மின்றி அவ்விராப் பொழுதைப் போக்கி, பசியினாலும் கிழத்தன்மையினாலும் உடல் வருந்த மற்றோர் புலைச்சியைப் பற்றுக்கோடாகக் கொண்டு திரும்பிவருகையில் இவ்விடத்தில் விழுந்திறந்தனள். சிவபெருமானுக்குரிய சிவராத்திரியிலன்று பனிநீரிற் படிந்தவளாய், உணவு நீக்கி நித்திரையை யொழித்திருந்தமையானும், எண்ணும லெறியப்பட்டவையாயினும் அவளெறிந்த வில்வம் சிவலிங்கபெருமானுடைய திருமுடியிற் பொருந்தினமையானும், அவளை இத் தேவ விமானத்திலேற்றிக்கொண்டு செல்ல வந்தோம். முனிவர்களே! இன்னுங் கேளுங்கள். இன்று சிவராத்திரியென்றும் இது சிவலிங்கமென்றும் இந்நாளில் ஆகாரம் நித்திரை நீக்கிச் சிவார்ச்சனை செய்வதனால் இன்ன பலன் வருமெனறும் தெரியாமல், சென்மாந்தர வினையினால் இப் புலைச்சி செய்த செய்கைகளும் எம்பெருமானுக்கு அருச்சனையாக முடிந்து அவளுக்குச் சிவலோகப் பிரா

ப்தி கிடைத்ததெனில், மனப்பூர்வமாகச் சிவராத்திரியில் விதிப்படி சிவபூசை செய்து விரத மனுட்டிப்போர் பெறும் பெரும்பேற்றை நாம் எவ்வாறு கூறவல்லோம்! துன்ப மனுபவிப்பவர்கள் யாவரையும் இரக்ஷிக்கும் கிருபையுடைய தலைவர் நம் சிவபெருமா னென்பதும் இதனாற் பெறப்பட்டது. இவை நிற்க; சிவலோகத்தைச் சேர்தற்கு இலக்காகிய இவள் இவ்வகைத் துன்பங்களை யனுபவித்தற்குக் காரணங்கள் யாவையெனில், இவள் முற்சென்மத்தில் தான் உண்ணு முன் பிச்சையிட்டு உண்ணாதவளாதலால் ஆகாரமற்றுப் பசியால் வருந்தினள். மதுவருந்திப் பாவங்களைச் செய்தமையால் நேத்திரங்களிழக்கப் பெற்றாள். பசுவின் கன்றென் றறிந்தும் அதனிறைச்சியைத் தின்றதினால் சண்டாளப் பிறவியை யடைந்தாள். விதவையாயினபின் பலரைப் புணர்ந்த பாவத்தினால் இப் பிறப்பிற் குட்டநோய் முதலிய பல நோய்கள் வருத்தத் தன்னை விவாகஞ் செய்வாரின்றி அலைந்தாள்.' எனக் கணத்தலைவர்கள் கூற அவர்களை யாம் பணிந்து விடைபெற்று மீண்டோம். அரசனே! மேற்கூறிய வாறு பல பெருந்துன்பங்களை யனுபவிப்போர் அவற்றிற்குரிய பாவங்களை முற்பிறப்பிற் செய்தவர்களெனத்தெளிந்து, கொன்றைப் பூமாலையை யணிபவராகிய சிவபெருமானுக்கு அடிமைத் திறஞ்செய்ய நாடுதலே பெருங்கடனாகும். நீ வருந்த வேண்டியதில்லை. நம் இறைவராகிய மாபலலிங்கேசர் வீற்றிருக்கும் கோகன்னத்துக்குச் சென்று அவரை வில்வ பத்திரங்களால் அருச்சனை செய்தால் உன்னுடைய துன்பங்கள் நீங்கு"மெனத்தெரிவிக்க; அரசன் முனிவர் கட்டளையைச் சிரசின்மேல் வகித்து, கோகன்ன க்ஷேத்திரத்தை யடைந்து மாசி மாதச் சிவராத்திரியில் விதிப்படி விரத மனுட்டித்து மாபல லிங்கேசுரரை யருச்சித்து இருடி புத்திரனைக் கொன்ற பாதகமும் பழவினைகளும் சாபமும் நீங்கப் பெற்றனன்.

## சுகுமாரச் சருக்கம்.

சிந்து நதிக்கரையின் பக்கத்திலே வயல்களாற் சூழப் பெற்றதும் நாற்றிசையும் பொன்மதில்களை யுடையதுமான குஞ்சர மென்னும் நகரமொன்றுளது. குஞ்சகன் என்னு மரசனே அந் நகர்க்கு அதிபதியாய் விளங்கினன். அவ்வரச னுக்கு ஆசிகூறும் ஓர் வேதியன் புத்திரரில்லாமையால் அரு மையான பெருந்தவஞ் செய்து சிவ பெருமானுடைய வரப் பிரசாதத்தினால் சுகுமாரன் என்னும் புத்திரனைப் பெற்றான்.

அழகெல்லாங்கூடி ஒரேவடிவமாக வந்ததென்று சொல் லும்படி வளர்ந்து வருகின்ற சுகுமாரன், வேதங்களைக் கசடற வோதி யுணர்ந்தமை போலவே, மதனாகமத்திற் கூறியுள்ள முறைமைகளனைத்தையும் கற்றுணர்ந்தவனாய், மாதர்களைத் தன்வசப்படுத்தும் ஆண்சிங்கம்போன்று மங்கையர் உபசரி க்க வாழ்ந்தனன். தம் எண்ணம் நிறைவேறப் பெறாத சில மாதர்கள், பொறாமை கொண்டு சுகுமாரனென்னு மொரு வன் கற்புடைய மாதர்களை அவர்கள் நிலைமை மாறும்படி கெடுக்குந் துஷ்டனென்று அரசனுக்குத் தெரிவித்தார்கள். அதைக் கேள்வியுற்ற அரசன் அதிகரித்த கோபமுடையவ னாய் நகர்க் காவலரை விழித்து, அத் துட்டனைப் பிடித்துக் கொண்டுவரும்படி கட்டளையிட, அக் காவலாளர் அரசன் கட் டளையைச் சிரமேற்கொண்டு சுகுமாரனைப் பிடித்து அரசன் முன் விடுத்தனர். சந்திரமபோலும் அவனுடைய அழகைக் கண்ணுற்ற அரசன், கோபந்தணிந்து, அந்தணர்குலத் துதித் தவனாயும், சுந்தர புருடனாயுமிருக்குமிவனைச் சீக்கிரம் அழை த்துக் கொண்டுபோய் நம் அரசாங்க எல்லையைத் தாண்டி விட்டுவிடுங்களென்று அவ்வேவலர்க்கு ஆஜ்ஞாபித்தான். அத்

தண்டக்காரர் உத்தரவின்படி அவனைப் பிடித்துக்கொண்டு போய் எல்லைக்கப்புறம் விடுத்து இவ்வாறுனக்குச் சம்பவித்தது உனது வினைப்பயனென்று சொல்லி யேகினர்.

சுகுமாரன் காட்டுள் நுழைந்து செல்லும்போது சிங்கம், புலி, யானை முதலிய துட்டமிருகங்கள் நெருங்கிவாழும் ஓர் வழிமுடுக்கி லகப்பட்டு, பெரியகாட்டை நோக்கி நடந்து திரிந்து தடாகமொன்றை எதிரே கண்டு அதைக் கிட்டிச் சேர்ந்தான். அத் தடாகத்தின் பக்கத்தில் கொலைத்தொழில் வாய்ந்த நீசகுலத்திற் பிறந்த ஒருத்தி, உலகமனைத்தையுந் தனக்கடக்கமாக மயக்கும் வல்லபமுள்ள மன்மதனும் கண்டு மயங்கும் அழகுடையவளாய் வருதலும், சுகுமாரன் அவளைக் கண்டுபெருமூச்செறிந்து கரிய அளகத்தையுடைய இவள் யாரோவென வருந்தி, தன்னை வெதுப்புகின்ற விரகாக்கினியினால் அழகிய மேகலாபரணமணிந்த அப் புலைச்சிக்குச் சமீபத்தில் மெல்ல மெல்லச் சென்றான். அவளும் தன்னருகில் வந்த சுகுமாரனைப் பார்த்து இவன் இக் காட்டில் வந்து இவ்வளவு சௌந்தரியமுள்ள வடிவத்தைக் காண்பித்தானேயென அவன்பாற் சென்ற மனமுடையவளாய், நாணமுற்றுக் கொடிபோலத் துவண்டு தானடைந்த விரகநோய் ஒருவருக்குந் தெரியாதபடி தனியே வருந்தினள். சுகுமாரனே முற்பிறப்பிற் செய்த தீவினைவழியின் சார்பிருந்தமையின், அந்தணகுலத்துதித்து அறிவின்மேம்பட்டவனாயிருப்பினும் அப் புலைச்சியின் புணர்ச்சிக்கு ஆசையுற்று, பற்பல விதமான இங்கித வார்த்தைகளைப் பேசி அவளருகிற் சென்று அவளுடைய பாதங்களிற் பணிந்து விழுந்தான். அவனுடைய செய்கையைப் புலைச்சி பார்த்துப் புன்னகைசெய்து அவனைத் தன் கரங்களாற் கோத்துத் தூக்கி, தனங்களிறுகத் தழுவி அவனை அழைத்துக்கொண்டு மரக்கும்பருக்குட் சென்று இருவரும்

உயிரொன்று உடலிரண்டென்று சொல்லும்படி மிக்க அன்போடு சுகித்து வாழ்ந்தார்கள். பலநாட்சென்று இவ்விருவருக்கும் புத்திரரைவரும் புத்திரிகளிருவரும் பிறந்து வளர்ந்தார்கள். இவருட் புத்திரரைவரும் பஞ்சமகாபாதகங்களையும் கூசாது செய்பவர்கள். புத்திரிகள் தாயினுஞ் சிறந்த பேரழகுடையவர்கள். சுகுமாரன் தன் புத்திரர்களோடு போக்குவரவு செய்வோரிடம் வழிபறித்துந் திரிந்தும் சனங்களுடைய பொருள்களை யழித்துக் கொள்ளையிட்டும், அவர்களைக்கொன்றும், பலவகைக் கொடிய தீமைகளையுஞ் செய்து வந்தான்! இக்காலத்தில் புலைச்சியாகிய அவன் மனைவியு மிறந்தனள். அவள் உயிர் துறந்தபின், தான்பெற்ற புத்திரிகளிருவரையும் மனைவியராகக்கொண்டு அவர்களோடு கூடிச் சுகித்துப் பலநாட்சென்று அவ்விடம் விட்டு ஓர் மலைச்சாரலையடைந்து அங்கு வசித்தான்.

ஓரரசன் கிரகணபுண்ணியகாலத்தில் மறையவர்களுக்குத் தானங்கொடுத்ததைச் சுகுமாரன் உளவு வைத்தறிந்து அம்மறையவர் செல்லும் பாலைநிலத்து வெளியிலே அவர்களைத் தடுத்து, அவர்கள் பொருள்களைக் கொள்ளையடித்தான். அவ்வேதியர்களிற்சிலர் நெற்றிபிளக்கப்பட்டு உதிரம்வடிய, அஞ்சிமனம் நடுக்குற அவ்விடத்தைவிட்டு விரைந்துநீங்கிப் பின்னும்அரசனிடத்திற்குச் சென்று தங்களுக்கு நேர்ந்த ஆபத்தைத் தெரிவித்தார்கள். அவ்வேதியர் தெரிவித்தவைகள் யாவற்றையும் அரசன்கேட்டு மிக்க கோபங்கொண்டு சைனிய வீரர்களை நோக்கி அக்கொடிய செய்கைகளைச் செய்த துட்டரைப் பிடித்து வாருங்களென்று கட்டளையிடலும், அவ்வீரர்கள் விரைந்தோடி ஒருவருக்கொருவர் முற்பட்டு மலைகள், குகைகள், பாதைகள், சந்துகளெங்குந்தேடி எவருமகப்படாமையால் கானகங்களிலும் நாடுகளிலுஞ் சென்று தேடினார்கள்.

அங்ஙனம் அவ் வீரர்கள் தேடித்திரிவதைச் சுகுமாரன் அறிந்து அவ்விடம் விட்டு நீங்கித் தனது மகளிர்களோடும் புத்திரர்களோடும் ஊனமேதயத்தின் பக்கலில் மலைச்சாரலிலுள்ள வனத்திற் சேர்ந்து வசித்திருந்தான். அங்கு வசித்திருக்குங்காலத்தில் இரண்டு பெண்களும் இரண்டு புத்திரர்களைப் பெற்றார்கள்.

அக் காட்டுக்கு அணித்தாய்ப் பல வளங்களுஞ் சிறந்து விளங்கும் நாகை நகரின்கணுள்ள ஆடவர்களும் பெண்களும் அங்குள்ள நாகேச்சுர ராலயத்திற் கோவில் கொண்டிருக்குஞ் சிவபெருமானை, சிவராத்திரி தினத்திலன்று, விதிப்படி சென்று தரிசித்தார்கள். சுகுமாரன் சிவராத்திரி மகிமையை யறியாதவனைப் அச் சிவாலயத்தின் அழகிய முற்றத்திலுள்ள நந்தவனத்திற் கிடக்கும் மலர்களைப் பொறுக்கிக் கொண்டு போகையில் மெய்யன்பு மிக்க அடியார்கள் நாகேச்சுரரைப் பணிந்து பிரார்த்திப்ப வற்றைப் பார்த்தான். அன்றிராத்திரியிற் பதினைந்து நாழிகை கடந்துபோக, இடபவாகனராகிய சிவபெருமான் சிவலிங்கத்திற் றோன்றிக் களங்கமற்ற வெண்ணிறமமைந்த மூன்றாம் பிறையும், கொன்றைமலர் மாலையும், மானும் மழுவாயுதமும் விளங்கும்படி தமதுருவைத் தரிசிப்பித்தலும், சுகுமாரனுந் தரிசித்துப் பணிந்து நீங்கினான்.

மதுவருந்தும் வாழ்க்கையும், மிக்க வலிபொருந்திய சரீரமும், பாவச்செயல்களு முடையவனாகிய சுகுமாரன், பாதகமே இறந்ததுபோன்று தனதுயிரிழந்தான். யமகிங்கரர்கள் பாசக்கயிற்றினாலே பலவகை ஆயுதங்களோடு சுகுமாரனைச் சூழ்ந்து அவனுடைய தோள்களைச் சேர்த்துக் கட்டிப் பலவாறு தண்டனை செய்யும்போது, திரிபுரங்களையும் நகைத்தெரித்தருளிய முதல்வராகிய சிவபெருமான் சுகுமாரன் அனுபவிக்கும் யமவேதனைகளைத் தமது திருவுள்ளத்தடைத்து,

சிவகணத் தலைவர்களை நோக்கி, முன்னாளிலே நமது இரவாகிய சிவராத்திரியினன்று எமது திருவடிகளைத் தரிசித்தவனாகிய சுகுமாரனை நீங்கள் போயழைத்து வாருங்களென்று கட்டளையிடலும், அக் கணத்தலைவர்கள் அங்குச் சென்று யமகிங்கரர்களை யெதிர்த்துப் பெரும் போர் செய்தமையால் அக் கிங்கரர்கள் எதிர்க்க ஆற்றலில்லாது நொந்து பெருந்துன்பங்களை யடைந்து தங்களிருப்பிடஞ் சென்று யமதரும ராசனுக்கு நடந்தவற்றை யுரைத்தனர். சிவகணத் தலைவர்கள் அச் சுகுமாரனை அழைத்துச்சென்று சிவசந்நிதானத்தில்விட, முக்கண்ணராகிய சிவபெருமான் கருணைகூர்ந்து சிவசாரூபமடையுமாறு திருவருள் செய்தனர்.

கிங்கரருரைத்தனவற்றைக் கேட்ட யமன் அச்சங்கொண்டு கொடிய பாவங்களைச் செய்த சுகுமாரன் சிவகணத்தலைவரோடு திருக்கைலையடைந்தமையையும், அக்கணங்கள் யுத்தமுகத்திற்செய்த செயல்களையும் சிவபெருமானிடம்பணிந்து தெரிவிக்கும் கருத்துடன் அக் கைலையை யடைந்தான். அங்ஙனமடைந்த யமன் சிவபெருமானைத் தரிசித்து வணங்கி, எம்பெருமானே! அடியேனுடைய தூதுவர்கள் சென்று நீசனாகிய சுகுமாரனைப் பிடித்துக்கொண்டு வருந்தருணத்தில் சிவகணங்கள் தடுத்துக்கோபித்து அடியேனுடைய சைனியங்களைக்கொன்று இச் சுகுமாரனை இங்குக் கொண்டுவந்தார்கள். இக் கொடிய பாவி தவமுதியோர்களும் பெறுதற்கரிய சிவப்பேறடைந்த காரணம் யாதோ திருவுளம்பற்றல் வேண்டுமென இரந்தனன். யமனுடைய வேண்டுதலுக்கிரங்கிய எம்பெருமான் புன்னகைசெய்து, இவன் ஒருகாலத்துங் கண்டிராத சிவராத்திரி விரதத்தை நமது மெய்யடியார்கள் முறைப்படி யனுட்டிப்பதைப் பார்க்கப்பெற்று, அன்றையத்தினத்திலே எமது திருவடியைத் தியானித்தான். அதனால் அக்கினி

தகிக்கக் கெடுகின்ற பஞ்சுப்பொதியைப்போல இவனிடத்திருந்த கொடும்பாதகங்க ளனைத்தும் நசிந்தன. யமகிங்கரர்கள் அச் சுகுமாரனது புண்ணியத்தைக் கூர்ந்து யோசிக்காமல் அவனைப் பிடித்ததே முதற் குற்றம். பின்னும் அவனைப் பல விதமாகத் துன்பஞ் செய்தமை அதினுங் குற்றம். அத் தருணத்திற் சிவகணத்தலைவர்கள் வந்தபோது உடனே தங்கள் தொழில்களைவிட்டு வணங்காதிருந்தமை அதனினுங் குற்றம். அத்துடன் அவர்களுக்குச் சமானராய்த் தங்களை மதித்துப் போர்புரியத் தொடங்கியது பெருங் குற்றமாதலின் அக் கிங்கரர்கள் அவ்வாறு தண்டிக்கப்பட்டார்களெனத் திருவாய் மலர்ந்தருளினர். இயமன் சிவபெருமானைப் பலவாறு தோத்திரஞ்செய்து விடைபெற்றுத் தன்பதியை யடைந்தான்.

---

# அங்குலச் சருக்கம்.



சாகரபுரத்திலுள்ள அங்குலன் என்னும் வேடன், ஒரு நாள் வேட்டையாடச் சென்று அடர்ந்தகாட்டிலே தனியே திரிந்து மிருகமொன்றுங் கிட்டாமையினுற் பதைபதைத்துத் தன்மனைவி மக்கள் பசியால் வருந்துவதை நினைந்து துன்புற்றுப் பின்னும் பற்பல கொடியமிருகங்கள் சஞ்சரிக்குங் கானகங்களெல்லா மலைந்து, ஒரு புதரைக் கண்டு அங்கே மிருகங்கள் வரக்கூடுமென்னுமெண்ணத்தினுல் அப் புதரின் பக்கலில் மறைந்து நின்றனன். சற்று நேரத்தால் அவனெண்ணியபடி ஓர் நிரைமான் கூட்டம் வருதலைக் கண்டு சற்றே மகிழ்வடைந்து பலவாறு அம்புகளைத் தொடுத்தும் பயன்படாமையால் மனமயர்ந்து பசிவருத்தத்தோடு ஒரு வில்வாரணியத்தை யடைந்தான். இவ்வாறு அற்றைப் பகற்பொழுது கழிய அவ் வாரணியத்தி லிருந்து, அந்தோ! குழந்தைகள் பசி பொறுக்கமாட்டார்களே! இதுவரையில் அவர்கள் கதியாதாய் முடிந்ததோ! தெரியேன். என்னையுங் கொடிய பசி மிக வருத்துகின்றது! என் செய்வே னெனப் பலவாறு துன்புற்று, இருள் வந்தடுப்பதனுற் கொடிய யானைக் கூட்டங்கள் வரின் யாது செய்வதென அஞ்சி, அங்குநின்ற பெரிய விருக்ஷமொன்றைக் கண்டு அது வில்வமர மென்பதையேனும், அவ்விரவு உத்தம சிவநிசியென்பதையேனு மறியாதவனுய், அம் மரத்திலேறி, அதிலிருந்துகொண்டு இன்றிரவு நமது தூக்கத்தை யொழித் திராவிட்டால் கீழேவிழுந்து பிராணனை யிழக்கநேரினும் நேருமென்பதை நினைத்து, சூரியோதயம் வரைக்கும் அம் மரத்திலுள்ள பத்திரங்களை யொவ்வொன்

ருகக் கிள்ளி யெறிந்து கொண்டிருந்தான். அவ்வாறு அவ் வேடனெறியும் வில்வத்தளைகள் அம் மரத்தின் கீழிருந்த சிவலிங்கப் பெருமானுடைய திருமுடியின்மீது விழ்ந்தன.

அடுத்தநாட்காலையில், அம் மரத்தை விட்டிறங்கிப் பின் னுஞ் சில காடுகளுக்குள் நுழைந்து மிருகங்களைவேட்டையாடி மாமிசங்களைக்கொண்டு மைந்தரைநினைந்து விரைந்து சென்று தன்குடிசையையடைந்தான். அங்கே தன்மனைவியை யழைத் துத் தான் கொணர்ந்த இறைச்சி வகைகளை அவள் கையிற் கொடுத்து அவற்றைப் பாகஞ்செய்யும்படி கற்பித்தபின் பசி யால் வாடிய புத்திரர்களைத் தேற்றிப் பின் சமைத்த இறைச் சிவகைகளை யவர்களுக் கூட்டித் தானும் மனைவியும் பசிதீர வுண்டிருந்தனன்.

இவ்வாறு வேட்டைத்தொழிலாற் தன் சீவியத்தை நட த்திவாழுங்காலத்தில் இறுதியெய்த உயிர்நீத்தனன். அவனை யமலோகத்துக்குக் கொண்டு செல்லும்பொருட்டு யமதூதர் நெருங்கியும், சிவகிரியை அபுத்திபூர்வமாக நோற்ற தவப்ப லல் சிவகணங்கள் அவ்வங்குலனைச் சிவபிரான் திருவடி நீழ லிற் சேர்த்தனர்.

குறிப்பு—சோழநாட்டிலே திருப்பழமண்ணிப் படிக்கரைக்கு வடமேற்கே மூன்று மைலிலுள்ள திரு ஓமாப்புலியூர் என்னுந்திருப் பதியே, மேற்கூறியவாறு சிவநிசியில் அங்குலன் விழித்திருந்து சிவ லிங்கப்பெருமானை வில்வத் தளைகளாற் பூசித்துச் சிவபதம் பெற்ற ஸ்தலம்.

---

# குபேரச் சருக்கம்.

காம்பிலி தேசத்திலே,வேதங்களிலே மகாபாண்டித்திய முடைய வேள்விதத்தனென்னும் பிராமண னொருவன் இருந்தான். அவன் பிரம விட்டுணுக்களுந் தேடிக்காணாத சிவபெருமானுடைய திருவடிகளை இடைவிடா தருச்சித்து முக்குற்றங்களையுங் களைந்து யாகங்களைச் செய்பவன். அவ் வேதியனியற்றிய அருந்தவத்தால் அவன்பால் குணநிதி என்கிற ஒரு புத்திரன் சனித்தான். அப் புத்திரனுக்கு ஐந்து வயதிலே வித்தியாரம்பஞ் செய்வித்து எழுவயதிலே உபநயனச் சடங்கு நடாத்தி வேதங்களையும் பிற கலைகளையும் கிரமமாகக் கற்பித்தான்.

அப் புத்திரன் விவாகஞ் செய்தற்குரிய பருவமெய்த, தந்தையாகிய வேள்விதத்தன் தன் குலத்துக்கும் கொள்கைக்கும் ஏற்ப ஓர் கன்னிகையை விதிப்படி விவாகஞ் செய்து கொடுத்து அவர்களைத் தன்வீட்டிலேயே யிருந்து வசிக்கும்படி வேண்டிய ஒழுங்குகள் செய்தான். இவ்வாறு குணநிதியென்பவன் தன் மனைவியோடு கூடிச் சுகித்து வாழுங்காலத்தில், விளைப்பயன் வந்தடுப்பத் துன்பத்தையும் அச்சத்தையும் தப்பாது கொடுக்கும் சூதாட்டத்தில் விருப்பங்கொண்டு தன் பிதா அறியாத வண்ணம் துட்டர்களோடு சேர்ந்து இரவும் பகலுஞ் சூதாடிப் பொருளைத் தோற்றுவருவான். இச் சங்கதியைச் சிறிதுமறியாத வேள்விதத்தன், தன்மனைவியை நோக்கி மைந்தனெங்குற்றனென்று கேட்கும்போதெல்லாம் அம் மாது அவன் கல்விகற்கச் சென்றிருக்கின்றானென்று சொல்லுவாள். இங்ஙனம் நிகழும்பொழுது, ஒருநாள் குண

நிதியென்பவனை அவனுடைய தாய் நோக்கி, மைந்தனே! உன்னுடைய தந்தையார் நீ எங்குற்றாயென என்னைக் கேட்குந்தோறும், யான் உண்மையை மறைத்து, அவன் கல்விகற்கச் சென்றிருக்கின்றானெனச் சொல்லிவந்தேன். நீ சூதாடச் சென்றிருப்பதாகத் தெரிவித்தால் உன் தந்தை உன்னைமாத்திர மன்று, என்னையும் பலவாறு கண்டிப்பார். நீயோ உன்பிதாவுடைய பெருமைகளையேனும் மறையவர் மரபில்வந்த மைந்தர்களின் ஒழுக்கங்களையேனும் கவனித்து நடக்கின்றாயில்லை. சூது தருமமும் பொருளும் இன்பமுமாகிய மூன்றுக்கும் இடையூறாயுள்ளது. சூதாட்டத்தில் வென்று பெறும் பொருள் இரையென்று மீன்விழுங்கிய தூண்டின் முள்ளைப்போல அதைவிட்டு நீங்காமைக்கு இட்ட ஒரு தளையாகி, மற்றைத் தொழில்களையெல்லாங்கெடுத்துப் பின்பு துக்கத்தையே தரும். ஆதலால் ஒருவன் தனக்குச் சூதாடுதலில் வெல்ல வல்லபம் இருந்தாலும் சூதாடலாகாது. சூதாடுவோர் ஒன்றை முன்பெற்று இன்னும் வெல்லுவோமென்னுங் கருத்தால் ஆடி நூற்றை இழப்பர். அவர்பொருள் அப்படியே அழிந்து வருதலால், அப்பொருளினால் அடையத்தக்க தருமமும் இன்பமும் அவருக்கு இல்லை. செல்வத்தைக் கெடுத்து வறுமையைக் கொடுத்தற்றொழிலிலே தவறாமையால், சூதை மூதேவியென்பர் அறிவுடையோர். உற்று யோசித்தால் சூதானது தரித்திரத்துக்குத் தூது, பொய்க்குச் சகோதரம், களவு சண்டை முதலிய கீழ்த்தொழில்களுக்கு மாதா, சத்தியத்துக்குச் சத்துருவென ஓர்ந்து அவ்விழிதொழிலை விடக்கடவாயென்று பலவாறுசொல்லியும் அவன் அவற்றைச் செவிக்கொள்ளாது சூதாடலோடு வேசியர் மையலிற் சிக்கி விபசாரமுஞ் செய்யத்தொடங்கினான். தொடங்கவே அவனிடத்தே தருமமும் புகழும் சிநேகமும் பெருமையும் அடையாது நீங்கப் பாவமும் பழியும் பகையும் அச்சமும் குடிபுகுந்தன.

"வாட்டடங் கருங்கட் சூளை மகளிர்மேன் மனம்வைப் போரைக
கோட்டரு கள்ளு நாளுங் குடிப்பவர் தம்மைக் கூடி
யீட்டரும் பொருளை வாவுற் றிருங்கவ றாடு வோரை
வேட்டமேன் மனம்வைப் போரை யாவரே விலக்க வல்லார்."

என்றபடி பொதுமகளிர்மே லாசைகொண்டோர், கள்ளுச் சாராயம் முதலிய வெறிப் பதார்த்தங்களை யருந்துவோர், கவறு சதுரங்க முதலிய சூதாட்டத்தில் மனம் வைத்தோர், வேட்டத்தில் விருப்புடையோராகிய இவர்களை அவை செய் யாதபடி தடுத்தல் யாவராலும் முடியாது. குணநிதியென் பவனும் இப் பிரமாணத்துக்கு இலக்காய்த் தன் தாய் பல வாறு புத்திகளைச் சொல்லியும் கேளாதவனாய்த் தூர்த்தனாகத் திரிந்தான்.

குணநிதி, ஒருநாள், தன் அன்னை துயிலுஞ் சமயம் பார்த்துத் தன் வீட்டுக்குச் சென்று, தன்பிதா முன்னரே அவளிடம் கொடுத்துவைத்திருந்த இரத்தின மிழைக்கப் பெற்ற மோதிரத்தைத் திருடிக்கொண்டு சென்று, அதையும் சூதில் வைத்து ஆடித்தோற்றனன். ஒருநாள் குணநிதியின் பிதாவாகிய வேள்விதத்தன், தான் தன் மனைவியிடம் கொடு த்த ஆழியைப் பிறனொருவ னணிந்திருப்பதை ஓர் மறுகிற் கண்டு, கவலைகூர்ந்து அவனிடம் அம் மோதிரம் சேர்ந்த வர லாற்றை வினவினன். அப்பொழுது அம் மணியாழியைத் தரித்திருந்தவன், வேள்விதத்தனைப் பணிந்து, ஐயனே! யான் திருடனல்லேன். உம்முடைய மைந்தன் குணநிதியென் பவன் எந்நாளுஞ் சூதாடுபவன். நேற்று யான்தரித்திருந்த ஆடையைவென்றான். இன்று அவன் அணிந்துவந்த இம் மோதிரத்தை யான் வென்றேன். நாளைக்குஞ் சூதாட வரு வான். அவன் தினந்தோறும் சூதாட்டத்திற் கனத்த பொரு ளைத் தோற்று வருகின்றான். இவ்வுண்மை தமக்கு இதுகாறுந் தெரியாது போலுமென்றனன்.

அவ் வார்த்தைகளைக் கேட்ட வேள்விதத்தன், நாராசம் காதுட்பாய்ந்ததுபோல் வெந்துருகித்தன்வீட்டுக்குச்சென்று மனைவியையழைத்து, இன்று உன் புத்திரனெங்குற்றானென்று வினவ, அவள், நம் புத்திரன் நீர்த்துறைக்கு நீராடச் சென்றனனெனத் தெரிவித்தனள். வேள்விதத்தன் பின்னு மவளை நோக்கி, அன்று அப்பியங்க ஸ்நானஞ் செய்யப்போம் போது உன்னிடம் யான் கழற்றிக்கொடுத்த கணையாழியெங் கேயென்று வினவ; அவள் யான் இதோநோக்கிச் செல்லும் பகற்போதுக் கடனை முடித்து வந்தபின் தருகின்றேனெனக் கூறிப்போயினள்.

வேள்விதத்தன் அவள் கூறிய வார்த்தைகளைக் கேட்டு, உண்மையைத் தானறிந்து, பொய்வார்த்தை கூறிய தன் மனைவியை அப்போதே கண்டிக்கும் ஆற்றல் நீதிவழியுடைய னாயினும் இகபரமிரண்டினிற்கு மத்தியாவசியகம் வேண்டற் பாலதாகிய நித்திய கருமத்தை முடிக்கச்செல்லும் தன் மனைவியைத் தடுக்காதிருந்து; விசிட்டமுடைய புண்ணிய நெறியில் தன் கருத்துடையவள்போல் நடித்து, தலைவனாகிய என்னைப புறப்படுத்தி, என் வழி வந்தும் என் மைந்தன் தன்னூழ் வழியால் விதிபிறழ்ந்து பாவ வழியில் நடப்பதை யான் சொன்னகாலத்து உண்மையை மறைக்கத் துணிந்து, கபட மார்க்கத்திற் றன் கற்பு நெறியைக் காட்டத் துணிந்து நெறி பிசகிய இவளையும், பாவங்களுட்டலையாய பாவங்களிற் சித்த விருத்தியைச் செலுத்தி நடக்கும் என் மைந்தனையும் தரும நூல்கள முறைபிடுவதற்கேற்ப உடனே விட்டு நீங்குவதே தக்கதென நிச்சயித்து, உடனே தன்னில்லை விட்டு நீங்கி மற் றோர் கிராமத்தை அடைந்து பிறிதோர் கன்னிகையையும் விவாகஞ் செய்துகொண்டு வாழ்ந்திருந்தான்.

குணநிதியென்பவன் தன்பிதாத் தன்னையும் தன் அன்னையையும் பிரிந்து சென்றதை யறிந்து, அவன் பிரிவுக்குத்

தன் துர்க்கிரியைகளே காரணமென்பதையுமோர்ந்து, இனிச் செய்வது யாதென்பது தெரியாதவனாய்த் தானும் தன் அன்னையைப் பிரிந்து உலைந்து திரியுங்காலத்தில்,ஓர்நாட் சிவநிசியிலன்று சிவாலயமொன்றை யடைந்தான். பசிமிக்குடையவனாயிருந்தவனாதலால் அச் சிவாலயத்திற் பெரும்பசியோடிருந்து அங்கே பத்தர்கள் செய்யும் சிவபூசையைப் பார்த்துக்கொண்டும் அன்ன பக்ஷணத்திலேயே அவா உடையனாய்ச் சிவபிரான் முன் நிவேதிக்கப்பட்டிருக்கும் அப் பக்கு வான்னத்தை எப்பொழுது அபகரிக்கலாமென வெண்ணித் தன் விருப்பம் கைகூடுமாறு கண் விழித்துக் கொண்டிருந்தான். சிவபூசைசெய்த யாவரும் பிரதமசாமப் பூசையை முடித்து நிருத்தங் கீதமுதலியன வியற்றித் தங்கள் இருப்பிடங்களை யடைந்தனர். சில பரிசனர் அச் சிவாலயத்திலேயே துயின்றனர். அவர்கள் நித்திரை செய்வதைக் கண்ட குணநிதி, சிவசந்நிதானத்திற் படைக்கப்பட்ட நிவேதனத்தை அபகரித்துச்செல்வதற்கு அதுவே தகுந்த தருணமென நினைந்து, சிவலிங்கத்தருகே மெல்ல நடந்து அங்குள்ள தீபநிரைகள் பிரகாசியாமையைக் கண்டு, அவற்றைத் தூண்டிப்பிரகாசிக்கச்செய்து, தான்விரும்பிய பதார்த்தங்களை யெடுத்துக்கொண்டு புறம்பே செல்லுகையில்; அங்கே துயின்ற பரிசாரகர் சிலரின் காலில் மிதிக்க, அன்னோர் விழித்து, திருடன்! திருடன்! எனக் குரலையிட, குணநிதி அவ்வுரத்த ஓசையைக் கேட்டு அச்சமுடையனாய் ஓடுகையில் அங்குக் காவல் புரிந்த இராசசேவகர் அவனைத் தொடர்ந்து பிடிக்கமுயன்றும் கூடாமையால பாணப்பிரயோகஞ் செய்ய அவன் நிலமிசை வீழ்ந்திறந்தனன்.

அவ் வேதியன் அஞ்ஞானத்தினாலேயே சிவராத்திரி விரதமும் சாகரணமும் ஒருங்கே அனுட்டித்தவனாயினான். சர்வ

சிவதயாபரராகிய சிவபெருமான் குணநிதியை விரதபூர்த்தி செய்தவனாக அங்கீகரித்தருளினர். அவன் மாண்ட அக்கணமே அவனைக்கொண்டு செல்லுதற் பொருட்டு யமதூதரும் சிவகணங்களும்வந்து சேர்ந்தனர். அவ்விருதிறத்தவருள்ளும் அவனைக்கொண்டு செல்பவர் யாவரெனச் சம்வாதம் நேர்ந்த பொழுது, சிவகணங்கள் யமதூதர்களை நோக்கி, இவன் எவ்வளவு பாபியாயினும் சிவராத்திரி விரதத்தையும் அதனோடு தொடர்புடைய விழிப்பையும் அறியாதே யனுட்டித்துப் புனிதனாயினன் ஆதலால், அவனை நீங்கள் தீண்டுதற்கும் அருகரன்று எனக்கூறி அவனைச் சிவலோகங் கொண்டு சென்றனர்.

அங்கேபிறந்த சிவாஞ்ஞைப்பின்படி குணநிதி கலிங்கநாட்டிலே அருந்தமன் புதல்வனாகப் பிறந்து உத்தமனென்னும் பேர்வாய்ந்து, பூர்வபுண்ணியத் தொடர்பினால், சிவபெருமானெழுந்தருளியிருக்கும் திருக்கோயில்கடோறும் நெய்விளக் கேற்றுவித்தும்; நறுமணங்கமழும் மலர்களைக் கொண்டு அருச்சனைசெய்வித்தும், தூபதீபங்கொடுப்பித்தும் பலதருமங்களைச்செய்து கலிங்கதேசத் தரசனாய் நெடுங்காலம் வாழ்ந்து உடல்நீத்து அளகைமாநகர்க் கிறைவனா யவதரித்து அந்நகரையாளும் பொழுது, பரமாத்துமரூபமாகிய தேஜசு பிரகாசித்துக் கொண்டிருப்பதனால் காசியென்றும், வருணை அசியென்னும் இரண்டு நதிகளுக்கிடையில் இருத்தலால வாரணாசியென்றும், எம்பிரான் அவ்வனாதியான க்ஷேத்திரத்தைவிட்டு நீங்க இட்டமில்லாது ஒருசிவலிங்க ரூபத்தில் மறைந்திருத்தலால் அவிமுத்தமென்றும் இவ்வாறு பல திவ்விய திருநாமங்களையுடைய ஸ்ரீகாசிப்பதியை யடைந்து சிவலிங்கப் பிரதிட்டைசெய்து சிவபெருமானை அருச்சித்துத் தவமியற்றுங் காலத்தில், அப் பெருமான் உமாதேவியாரோடும் இடப

வாகனாரூடராய்த் தோன்றி, அன்பனே! உன்னுடைய தவத்தை மெச்சினோம். உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்பாயாக வெனக் கட்டளையிட, அரசன் பலமுறை பல்வாறு வணங்கி, எம்பெருமானே! பிரம விட்டுணுக்களுந் தேடிக் காணாத தேவரீரது திருவுருவத்தை அடியேன் என் கண்கள் கூசாது காணுமாறு தரிசிப்பித்தருள்கவென இரப்ப, சிவபெருமான் அவன் விண்ணப்பத்தைத் திருவுளங்கொண்டு ஆயிரங்கோடி சூரியப் பிரகாசமுடைய தமது திருவுருவைத் தரிசிப்பித்தருளினார். அப்பொழுது பரஞான அபரஞானங்களையே தமது சும்மைகளாகக்கொண்டு விளங்கும் உலக மாதாவாகிய உமாதேவியாரை அளகைக்கிறைவனுற்று நோக்கி, எம்பெருமானது திருமேனி படிந்திடுமாறு இம் மாது செய்த அருந்தவம் யாதோவெனக் கொண்ட எண்ணத்தைப் பிராட்டியார் அறிந்து மனங்கறுத்து அவனுடைய ஒரு நேத்திரங் கெடும்படி செய்தனர். சிவபெருமான் இதையறிந்து உமையம்மையாரை நோக்கி, பெண்ணே! இவ்வன்பன் உன் தவப் பெருமையை நோக்கி யுளங் களித்தானேயன்றி வேறு பிழை இயற்றினவனன்று. ஆதலால் நீ கொண்ட முனிவை யொழித்து அவனிழக்கப் பெற்ற நேத்திரத்தைக் கொடுக்கக் கடவாயெனக்கூற, தேவியார் தாம் கொண்ட கோபத்தை யொருவாறு தணித்து, அவ்வரசனுக்கு நேத்திரத்தைக கொடுத்தனர். இயக்கர் வேந்தன் தேவியாரைப் பலமுறை பணிந்து தோத்திரஞ் செய்து நிற்ப, சிவபெருமான் திருவுளமகிழ்ந்து அவ்வரசனுடைய மேனியை அன்புறத் தடவி, நெடுங்காலமாக உஷ்ணமாகிய அக்கினி மத்தியில் நின்று ஐம்புலன் வழியே செல்லாதபடி மனதை ஒடுக்கி அருந்தவஞ் செய்கின்றவர்களிலும் பார்க்க ஒருபடி மேற்பட்ட மெய்யன்புடைய அன்பனே! நீ இன்றுமுதல் எமது தோழனாகவிருந்து அளகாபுரியை யாளக் கடவாயெனத் திருவாய்மலர்ந்து அந்தர்த்தானமாயினார். அக்

காலந் தொடங்கி அம் மன்னவன் இருநிதிக் கிழவனாய்க் குபேரனென்னும் பெயரோடு அவ்வளகாபுரியை அரசு செய்திருக்கின்றான்.

பத்தியின்றிச் சிவராத்திரி விரதத்தால் இவ்வாறு இஷ்டபோகங்களும் முத்தியும் கிட்டுமாயின், பத்தியோடு இவ் விரதத்தை அனுட்டித்தவர்கள் அவற்றை எவ்வாறு இல குவிற் பெறுவார்களென்பதைச் சொல்லவும் வேண்டுமோ? திருடுவதற்காகச் சிவாலயத்திருந்த தீபத்தைத் தூண்டியதால் இப் பெரும்பேறு கிடைக்குமாயின், சிவராத்திரி காலத்தில் சிவ சந்நிதானத்தில் மெய்யன்போடு நெய் விளக்கேற்று வோரும், சோடசோபசாரங்களில் இயன்றளவு ஒன்றையாவது செய்வித்துத் தரிசனஞ் செய்வோரும் பெறும் இகபர நன்மைகளை யளவிட்டுக்கூற யாரோ வல்லவர்.

---

# சாலிகோத்திரச் சருக்கம்.

இங்ஙனம் கூறிவந்த சூதமுனிவரை அங்கிரா, பிருகு, ததீசி, அத்திரி, காசிபன், சுபேதன், வான்மீகி, சரபங்கன், சாபாலி, பரத்துவாசன் முதலிய முனிவர்கள் யாவருந் துதித்து, முனி சிரேட்டரே! சிவநிசி நோற்றவர்கள் மறுமையிற் பேரின்ப வீடு பெறுதலன்றி இம்மையில் விரும்பிய பயன்களைப் பெறுவார்களோ? இவ்வையத்தையும் நீக்கி யருள வேண்டுமெனக் கேட்டனர். சூதமுனிவர் அவர்கள் வேண்டுதலைச் செவிமடுத்துப் பின்வருமாறு கூறுவாராயினர்.

முனிவர்களே! மெய்யன்போடு சிவராத்திரி விரதமனுட்டிப்பின் அது வீடுபேற்றை மாத்திரமன்று; இம்மையில் ஆரோக்கியத்தையும் பலசெல்வங்களையுங் கொடுத்து, பாவங்களையும் நாசஞ்செய்யும். இவ்வுண்மையை விளக்கும் கதையொன்றைச் சொல்வேம் கேளுங்கள். அறிவு, அருள், அடக்கம், சிவபத்தி முதலியவைகளெல்லாந் திரண்டு ஒரு வடிவம் எடுத்தாற் போன்றவரும், நல்வினை தீவினைகளால் வரும் ஆக்கக்கேடுகளிலே சமபுத்தி பண்ணுகின்றவரும் வேதவிற்பன்னருமாகிய சாலிகோத்திரர் என்னும் வேதியரொருவர் இருந்தார். அவர் வாழுங்காலத்திலே வறுமையென்னுங் கொடிய நோய் அவரையும் அவருடைய சுற்றத்தவரையும் பிடித்து வருத்த, அதுவும் திருவருட் செயலேயென வுணர்ந்து அத்தரித்திரம் நீங்குதற்கு வழியாதெனத் தெரியாது அகத்திய முனிவர் வசிக்கும் பொதியமலையை நோக்கிச்சென்று, அம்முனிவர் பெருமானைத் தரிசித்து அவருடைய திருவடிகளிற் பலமுறை பணிந்து போற்றி; பாம்பின் வாய்த்தேரைபோலத் தரித்திரமென்னும் கொடிய பிணிவாய்ப்பட்டுத் துன்புறும் தமியேனை அத் துன்பத்தினின்று நீக்கிக் கரைசேர்த்தல் தேவரீரது கடனென வணங்கி நின்றார்.

முனிவர் பிரான் அவ்வேதியரின் பிரார்த்தனைக்கிரங்கி, நீ சகல வினைகளையும் நாசஞ்செய்யும் சிவராத்திரி விரதத்தை அனுட்டிப்பையானல் வறுமையென்னும் பெருங்கடலை நீந்திக் கரைசேர்ந்து, சகலபோகங்களையு மனுபவித்து இறுதியிற் சிவபதம் பெறுவாயென்று உறுதியோடு வாக்களித்தனர். கலை வல்லவராகிய அவ் வேதியர், அகத்தியர் திருவாய்மலர்ந்த கட்டளையைச் சிரமேற்கொண்டு, பின்னும் அம் முனிவரை வணங்கி அவ் விரதத்தை யனுட்டிக்கும் முறையையும் இடத்தையும் திருவுளமகிழ்ந்தருளவேண்டுமென்று கேட்ப, குறுமுனி அவ் வேதியர் கேள்விக்கு மகிழ்ந்து, 'அறிஞனே! உலக ரக்ஷகரான சிவபிரான் உமாதேவியாரோடு விரும்பி வீற்றிருக்கும் வேதவனமென்னும் ஒரு க்ஷேத்திர முண்டு. முன் பல சென்மங்களை யெடுத்துத் தீவினைகளைச்செய்து அதுவே காரணமாகப் பின்னும் பிறப்பெய்தி உழலும் பித்தரும் அத்தலத்தைச் சேர்ந்து இறப்பாராயின் சிவபெருமானுற் றாரகமந்திர முபதேசிக்கப்பெற்றுச் சிவசாயுச்சிய மடைவரென்றால் அத்தலத்தின் பெருமை அளவிட்டுக் கூறப்படும் தரத்ததன்று. அம் மறைக்காட்டின்கண் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானது சந்நிதிக்கு முன்னர் அடியார்களுடைய வெவ் வினையைச் சுட்டெரிக்கும் வன்னிமர மொன்றுளது. வேதவொழுக்கந் தவறிய வேதியராயினும், பிரசைகளை வருத்திச் செங்கோல் கோட அரசியற்றும் மன்னவராயினும், நிறை பிறழ்ந்தொழுகும் வணிகராயினும், நெறிதவறி யொழுகும் மற்றெவராயினும் அம் மறைக்காட்டைச் சென்றடைந்து, வினைகள் யாவற்றையுங் களையும் வேதநதியைச்சேர்ந்து விதிப்படி தீர்த்தமாடி, கோடித்துறையிற் படிந்து, முதற்சுருதி தொட்ட வாரிதனிற் றோய்ந்து, மணிகன்னிகையிற் றுன்னி அந் நீர் மூழ்கி மறைக்காட்டீசரை உள்ளன்போடு முறைப்படி வணங்குவோர் இம்மையிற் சகல பேறுகளையும் பெற்று மறுமையில் முத்தியை

யும் பெறுவர். ஆதலால், நீ அத் தலத்தை அடைந்து விதிப்படி சிவநிசி நோற்பாயாகில் கைத்தலத்தில் வைத்த நெல்லிக்கனிபோல நின் விருப்பம் சித்திபெறக் காண்பாய். இது சத்திய' மெனக் கூற, அம் முனிவரிடத்தே விடைபெற்றுக்கொண்டு அவ் வேதியர் வேதாரணியத்தை யடைந்தார்.

அகத்திய முனிவர் கற்பித்தருளியபடியே, அவ் வேதியர் திருமறைக்காட்டைச் சேர்ந்து அங்குள்ள தீர்த்தங்களில் முறைப்படி ஸ்நானஞ்செய்து திருக்கோவிலை வலம் வந்து வீரகத்திச் சேதகராகிய விநாயகக்கடவுளைத் தொழுது, பின் வேதாரணியேசுரரையும் யாழைப்பழித்த மொழியம்மையாரையும் வழிபட்டுத் துதித்து, பஞ்சாக்ஷரத்தை இடைவிடாது நெஞ்சில் நிறுத்தி மாதந்தோறும் வருகின்ற சிவநிசியைத் துயில் உணவு நீத்துக் கிரமமாக அனுட்டித்துவந்தனர்.

சாலிகோத்திரர் விதிவழுவாது சிவபெருமானை அருச்சித்த ஓர் இரவில், பெருமான் தமது சத்தியோடு வெள்ளை விடைமேலெழுந்தருளி அவ் வேதியர்க்குத் தரிசனங்கொடுத்துத் திருவருணோக்கஞ் செய்தருளினர். வேதியர் பரமபிதா மாதாக்களாகிய இருவரையும் உள்நோக்கத்தினாற் கண்டு தரிசித்து; கண்களிலிருந்து ஆனந்தபாஷ்பஞ் சொரிய, நாத் தழுதழுப்ப, உரைதடுமாற, இரு கரங்களையுஞ் சிரமேற் குவித்து; நெடியவனும் பிரமனும் காணாத நிமல ஞானக்கொழுந்தே! அடியேனுக்கு அபயங்கொடுத்தருளிய அருட்பெருங்கடலே பூமிமுதல் முப்பத்தாறு தத்துவங்களாகி அவைகளுக்கு வேறாய் விளங்கும் பரமனே! முத்தொழி லியற்றும் இறைவரே! பஞ்சகிருத்திய தாண்டவஞ் செய்தருளும் ஆண்டவரே! நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம், இந்து, இரவி, இயமானன் என்னும் எட்டுருவம் உடையாரே! சோம சூரியாக்கினி என்னும் திரிநேத்திரங்களோடு விளங்குபவரே! ஞானமூர்த்தியே! நீலகண்டப்பெருமானே! மறந்தாயினும் வாழ்த்துவோரை வழி

பாடு செய்பவர்களுக்கும் பேரருள் வழங்குபவரே! என அப்பரையும்; மாதரி! வீரி! அடியேனை யாதரிக்கக்கடவாய், மகேசுவரி! அரிஹர பரமேசுவரி! அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயகி! காலபைரவி! அகோரவீரேசுவரி! ஆயி! மகமாயி! தேவி! என அம்மையாரையும் துதித்துப் பாடியாடி நிற்கும் போது, அவ் வேதியருக்குப் பரமசிவன் திருவருணோக்கஞ் செய்து, அன்பனே! நீ ஆகண்டலனைப்போல உன்மனைவி மகார் சூழப் போகமெல்லாம் குறைவற இம்மையிலனுபவித்து, மறுமையில் எமது கைலையை யடைகுதியென ஆஞ்ஞாபித்து மறைந்தருளினர்.

சாலிகோத்திரர் விடைபெற்றுத் தம்மிருப்பிடஞ் சென்று இந்திரபோகமனுபவித்து, இறுதிகாலத்திற் பதஞ்சலியும் புலிமுனியும் காண நித்தம் தில்லைமன்றுள் நிருத்தஞ்செய்யும் சிற்சபேசரது பூவடிவாம் சேவடிக்கீழ் மருவினர்.

இச் சிவராத்திரிக் கதைகளை உள்ளன்போடு படிப்போரும், பிறர் படிக்கக் கேட்போரும், பிறரைக்கொண்டு படிப்பித்துக் கேட்போரும், கேட்டவற்றைத் தம் சிஞ்சித்துவத்தை உணர்ந்து ஐயந்திரிபற விற்பன்னர்பாற் கேட்டு உண்மையை யுணராமுன் திரிபர்த்தங்கொண்டு மயங்கத் தம் புத்திக் கிடங்கொடாத ஆற்றலுடையாரும், சாறுமிழ்ந்து கோதுண்ணும் பேறுடை விலங்கொப்பத் தம் சமயத்தை யோராது பரசமயத்தை மெய்ச்சிப்புகுந்து, அது வாயிலாக அவிவேகத்தினல் சைவசம்பிரதாயங்களை இகழாதாரும் சத்தியப்படி சிவபெருமானது திருவருளைப்பெற்று இருமையினும் வாழுவர்.

சிவராத்திரிக் கதைகள்
முற்றுப்பெற்றன.



# சூசனம்.



இவ் விரதம் முத்திகாமிக்கே மிகச் சிறந்தது. இதனைச் சங்கற்ப பூர்வமாகப் பதினான்கு வருடகாலமேனும் இருபத்து நான்கு வருடகாலமேனும் விதிப்படி யநுட்டித்து உத்தியாபனஞ்செய்தல்வேண்டும். தொடங்கிய விரதத்தை இடையே விடுவோரும், விதிப்படி உத்தியாபனஞ்செய்யாதோரும் விரதபலத்தை யடையார்.

இவ் வுத்தமோத்தம விரதத்தை அநுட்டித்த விசேட புண்ணிய பலத்தால், பிரமா படைத்தற் றொழிலையும், விஷ்ணு காத்தற் றொழிலையும், இந்திரன் தேவராசத் தன்மையையும், அக்கினி முதலியோர் திக்குப்பாலகத் தன்மையையும், நந்தி பிருங்கி மஹாகாளர்முதலியோர் காணாபத்தியத்தையும், வசிட்டராதி இருடிகள் வேண்டிய பேறுகளையும், இராமர் கிருஷ்ணர் முதலியோர் இஷ்ட சித்திகளையும் பெற்று மறுமையில் முத்தியையும் பெற்றார்கள். இவை நிற்க!

உபவாசத்தோடு சுவாமி தரிசனம் சிவலிங்கபூசை நித்திரையின்மை புண்ணிய பாவக் கேள்வி என்பவற்றைப் புத்தி பூருவமாகச் செய்யாதவனாய்ச் சிவராத்திரியென்னும் உணர்ச்சிதானும் இல்லாதவனாயுள்ள வேடன் முதலியோர் அவர்கள் செய்த அபுத்தி பூருவச் செயலினால் சிவபதம் அடைந்தனரென்பது இனிது பெறப்படுதலால், இனி எத்துணைக்கொடும் பாவங்களையும் விரும்பிச் செய்தபின் ஒரு சிவராத்திரி விரதத்தைப் புத்தி பூருவமாக அநுட்டித்தலால் அப் பாவமெல்லாந் தீரச் சிவபதஞ் சித்திக்குமாதலால் யாவரும் எப் பாவங்களை

யும் செய்தலாகும் என்றும், அதனற் சமயாசாரங்களையெல்லாம் போற்றிக்கொள்ளுதல் வேண்டியதன்று என்றும் பலர் ஆசங்கை கொள்ளுவர்.

காலங்களனைத்தும் ஒருவாற்ருனுந் தம்முள் வேறுபாடின்றி ஒரு பெற்றியனவேயாய் நிகழவும் இது இது இவ்விப் புண்ணியகாலமெனவும் இதனி னிது இத்துணை விசேடமுடைய புண்ணியகாலமெனவும் வழங்கும் வழக்கு யாது பற்றி வந்ததென்பது ஆராய்தற் பாலதொன்ரும். அவ்வாறே தலங்கள் தீர்த்தங்கள் அனைத்தும் ஒத்த திறத்தினவேயாகவும் அவ் வவற்றுள்ளும் இது இது இத்துணை விசேடமுடைத்தாய்ப் புண்ணியமென்னு மொழி முன்னகச் சேர்த்துப் போற்றிக்கொள்ளத் தக்கது என்னும் வழக்கு யாது பற்றி வந்ததென்பதும் ஆராய்தற் பாலதேயாம்.

இயல்பானே உருவமிலராகிய கடவுள் உருவங் கற்பித்துக் கொள்ளாதவழி அவரை நினைந்து வழிபடுதல் இயலாமையின், அடியவர்கள் தம்மைச் சிரத்தையோடு நினைந்து வழிபட்டு உய்யும்பொருட்டு அவ்வவர் தாரதம்மியத்துக்கேற்பக் கற்பித்துக் கொள்ளப்படுந் திருவுருவங்களைக் கொண்டு பாலில் நெய்போல யாண்டும் வியாபித்திருக்குந் தாம், தயிரில் நெய்போல அத் திருவுருவங்களில் விசேட வியாத்திபெற்று நின்று அவ்வவர் செய்யும் வழிபாடுகளைக் கொண்டருளுவர். அங்ஙனமே தம் மடியார்கள் விசேட வழிபாடு செய்யும்பொருட்டுச் சோமவாரம் சிவராத்திரி முதலிய காலபேதங்களையும், தில்லை மதுரை முதலிய தலபேதங்களையும் அவர்கள் முழுகிப் புனிதராகும் பொருட்டுக் கங்கை காவிரி முதலிய தீர்த்த பேதங்களையும் விசேட முடையனவென்று கற்பித்து வைத்து இவ்விப் புண்ணியகாலத்திலே இவ்விப் புண்ணிய ஸ்தலத்திலே இவ்விப் புண்ணிய தீர்த்தத்து முழுகலோடு இவ்

விவ்வாறு வழிபாடு செய்வார்க்கு இவ்விப் பயன் சித்திக்கு மென்று உண்மை நூல்களில் விதித்தருளினர். கடவுள் எதனைப் புண்ணியமென்று விதித்தாரோ அதுவே புண்ணியமும், அதற்கு எதனைப் பயனென்று விதித்தாரோ அதுவே பயனும், எதனைப் பாவமென்று விலக்கினரோ அதுவே பாவமும், அதற்கு எதனைப் பயனென்று விதித்தாரோ அதுவே பயனுமாயிருக்கும்; அங்ஙனமன்றி, அவரால் விதிக்கப்படாதது புண்ணியமுமன்று, விலக்கப்படாதது பாவமுமன்று. இப்படி வகுக்கப்பட்ட புண்ணியங்களுள் சற்றும் பிரயாசமின்றி மிக எளிதிற் செய்யப்படுவனவாயும் மிகுந்த பயனைத் தருவனவாயும் இருக்கும் புண்ணியங்களுமுண்டு; பெரும்பிரயாசத்தினற் செய்யப்படுவனவாயும் சிறுபயனைத் தருவனவாயும் இருக்கும் புண்ணியங்களுமுண்டு, பாவங்களும் இப்படியே யிருக்கும். இப்படிப்பட்ட புண்ணிய பாவங்களைச் செய்பவர்கள் அதற்குக் கடவுளால் நியமிக்கப்பட்ட சுகதுக்கங்களை அடைவார்கள். ஆகையால் பிரயாசமின்றி மிக எளிதிற் செய்யப்படும் புண்ணியங்களினாலும் மோக்ஷமடையலாமென்பதற்குச் சந்தேகமில்லை. ஒருவன் அற்ப பாவத்தினலே நரகடைவானெனின், அற்ப புண்ணியத்தினலே ஒருவன் மோக்ஷமடைதலுங் கூடுமே! பாவத்தினல் வருந்துன்பம் அவனுக்கு உண்டெனில், புண்ணியத்தினல் வரும் இன்பமும் அவனுக்கு உண்டென்பதற்குச் சந்தேகமென்னே? இதைக் குறித்து இன்னும் விரிப்பிற்பெருகும். இக் கொள்கை தற்காலத்து நவீன சமயங்களுக்குமுடன்பாடாமென்பதை யாரும் மறுக்காரெனில், பின் இவ்விஷயத்தைக் குறித்து ஆட்சேபனை செய்வாருமிலர். இங்ஙனமாகையால் சமயாசாரங்களில் வழுவாது நின்று சிரத்தையோடு விதிக்கப்பட்ட புண்ணிய காலம் முதலியவற்றில் முறைப்படி புத்திபூருவமாக விசேட வழிபாடு செய்பவர்க்கன்றி, ஏனையோர்க்குப பாவங்கள் நசி

ந்து சிவபதங் கிடைக்குமென்பது ஒருதலை யன்றென்பதே துணிபு.

இனி முன்னைய சென்மங்களில் நல்வினை பெரிதுஞ் செய்துள்ளவர் சிறுகிய தீவினைவயத்தாற் பிறந்து செயற்பாலன உயற்பாலன உணராது மயங்கித் தீவினைப்பயனை நுகர்ந் தொழியும்வழிக் கடவுளானவர் அவரது முன்னை நல்வினைப் பயத்தால் அவ்வவர் தாரதம்மியத்துக் கேற்ப வன்றொண்டர் முதலியோருக்குப் போலத் தாமேவந்தும், பெத்தான் சாம்பான் முதலியோருக்குப்போலத் தக்க குருமூர்த்தியில் அதிட்டித்து நின்றும், கண்ணப்பர் முதலியோருக்குப் போலப் புண்ணிய ஸ்தலத்துத் தாவரத்திருமேனியில் அதிட்டித்து நின்றும், சூரபன்மன் முதலியோருக்குப் போலப் புண்ணிய காலத்துத் தாமே ரூபபேதத்தோடு வெளிவந்தும், சிங்கவருமன் முதலியோருக்குப் போலத் தக்க குருவோடு புண்ணிய தீர்த்தத்தில் அதிட்டித்து நின்றும், அவ்வவர் மயக்கந் தீர்த்து ஆட்கொண்டருளுதல் உண்மையாமென்க. இங்ஙனமே மேற்போந்த சரித்திரங்களுட் கூறப்பட்ட வேடன் முதலாயினோர் முன்னைய சென்மத்திற் செய்த நல்வினைப் பெருக்க முடையராதலின் அவர்களுக்குத் தாவரத் திருமேனியோடு சிவராத்திரி புண்ணியகாலத்தில் அதிட்டித்துநின்று கடவுள் அருள் செய்ததில் மலைவென்னோ? பக்தியின்றிச் சம்பவித்த செயல்கட்கும் களிகூர்ந்து பூசைசெய்ததாகக் கருதிய எங்கள் சிவபெருமானுடைய கருணையை என்னென்றெடுத்துரைப்பேம்! அப்பரமபதியன்றோ நம் பரமநாயகர், முழுமுதற்பொருள், பெருங்கருணைவள்ளல், ஆன்மரட்சகர்.

கடவுளா லுணர்த்தப்படும் பக்குவ முடையனவாகிய பலவகைப்பட்ட பிறவிகளிலும் தனது பூர்வகன்மாதி காரணமாகப்பிறந்து ஆன்மாவானது தன்னையறியு மறிவுதலைப்படும்

வரைக்கும் பல சென்மங்களில் பிறப்பது மிறப்பதுமாக வுழன்று திரிந்து அவ்வப் பிறவிகடோறும், கருமாதி பாவ புண்ணியங்களை யனுபவிக்கும் என்னும் உண்மையையும்; பரமசிவன் உலகத்தைப் படைத்தல் அழித்தல் முதலியவை களைக் கூறும் வேதவாக்கியப் பொருள்களை வலியுறுத்தி விரித்து அறிவிக்கும் புராணம் உலகத்தினது தோற்றமும், ஒடுக்கமும், பாரம்பரியங்களும், மனுவந்தரங்களும், பாரம்பரியக் கதைகளுமாகிய இவ்வைந்தையும் கூறுதலால் பஞ்சலக்கணம் எனவும் பெயர் பெறும் என்பதையும் நம்மால் வெளிப்படுத்தப்பட்ட **புராணம்** என்னும் புத்தகத்திலும், இனி வெளிப்படுத்தப்படும் **சைவமகத்துவம்** என்னும் புத்தகத்திலும் காண்க.

வாழி மாதவர் வாழி மனுநெறி
வாழி மாநிலம் வாழிநல் லானினம்
வாழி நான்மறை வாழி மழைமுகில்
வாழி வைதிக சைவ வழக்கமே.

## சிவராத்திரி மான்மியம்

## முற்றிற்று.



☞ மறைஞானசம்பந்தநாயனார் அருளிச்செய்த சிவராத்திரி கற்பங்கள் இதன்பின் சேர்க்கப்பட்டுள.

# மகாசிவராத்திரிகற்பம்.



உலகம் புரிய வுமைபெற்ற வைங்கை
மலையினடி வாரஞ்சேர் வாம். (க)

உலகமும் பல்லுயிரு மொன்றிநிறைந் தோங்கி
யிலகுமம லன்சிவமென் பேம். (உ)

அனைத்துயிரு நீங்கா வமலனைநீங் காளென்
மனத்தினுமுள் ளாள்குறையென் மற்று. (ங)

கந்தனடி பந்தனடி கட்டுரைவேன் தன்முதலோர்
தந்திருத்தா ளும்பணிவாந் தாழ்ந்து. (ச)

ஆகமத்து மாராய்ந் தமலசிவ ராத்திரியின்
மாகத்திற் பூசனைசொல் வாம். (ரு)

மாகத் தபரதிர யோதசியோ டேபதினன்
கேகவா ரத்தினிசை யின். (சா)

அற்றைநிசி யிற்சிவன்று ளர்ச்சிக்கப் பாசவித
மற்றமலன் பாதமடை வார். (எ)

சத்திமய மேபதின்மூன் றும்பிற் சதுர்த்தசியச்
சத்திமான் மேனியே தான். (அ)

இரவுதிர யோதசிநா லேழொன்றி னேடே
யொருநா ழிகைபதினன் குள். (கூ)

ஒன்றியுறி னுத்தமத்தி னுத்தமமே சத்திமயங்
குன்றியுறி னுத்தமமாக் கொள். (க0)

ஒன்றுடனு மொன்றுச் சதுர்த்தசியி னர்ச்சிக்க
மன்றவது தான்மத்தி மம். (கக)

ஒன்றிற் சதுர்த்தசியி னேடே யமாவாசை
மன்றவது தானதம மாம். (கஉ)

கூடினமா வாசைபதி ஞன்கிறுதிக் கூறுதனிற்
கூடுமதற் குப்பெயர்கு கு. (கங)

புரிந்தார் குருப்புணர்ந்த பொல்லாநாட் பூசை
யெரிந்தார் நிரயத் திழிந்து. (கச)

வைதிகர்க்கே பாங்கமா வாசைச் சதுர்த்தசிதான்
சைவர்க் கதன்முன்னுட் சால்பு. (கரு)

திதித்திரயஞ் சேர்ந்த சிவராத் திரிதான்
மதிக்கிலிரு வர்க்கும் வரம். (கசு)

அற்றைநிசி யந்தத் தமர்வாசை தான்வந்து
பற்றுதன்முன் பூசையினைப் பண். (கஎ)

தந்தமக்குத் தக்கசம யத்தினருச் சித்தார்க்குச்
சிந்துமிடர் வாய்க்குஞ் சிறப்பு. (கஅ)

அருச்சனையில் லாருறங்கா தற்றைநிசி முற்றுஞ்
சரிககசிவன் ருள்வணங்கித் தாம். (கசு)

தரிக்க கவுதுகமுன் னுளதன்பின் னுளிற்
பிரிக்கவுண லாதி பிற. (உ௦)

ஆடிநீர் வேண்டுமுப யோக விதமனைத்துந்
தேடிச் சிவபூசை செய். (உக)

புரிகயா மந்தோறும் பூசைநிசி வேலை
பரிவுறவே நூல்விதியைப் பார்த்து. (உஉ)

ஆட்டிடுக கவ்வியம்பஞ் சாவமிர்தந் தேனிக்கி
னீட்டியநீர் யாமமுறை யின். (உங)

சர்க்கரைதேன் பானெய் ததியென்ற வோரைந்து
மற்புதனுக் காட்டுமமிர் தம். (உச)

தாவித்துக் கவ்வியத்தைப் போலத் தனித்தனியே
யாவித் தரன்முடிமே லாட்டு. (உரு)

சாத்துக வில்வமரை சாதிநந்தி யாவர்த்தப்
பூத்தனையும் வேலைமுறை புக்கு. (உசு)

முறையுறவே முற்கான்னம் பாயசந்தி லான்ன
மிறைமுன்சுத் தான்னமுநீ யேற்று. (உஎ)

பரிவுறவே பாத்திய மாதி யனைத்தும்
புரிகவிதி பார்த்துணர்ந்தின் போடு. (உஅ)

பசிக்கழிந்தா னீரலது பால்பழந்தா னற்பம்
புசிக்கமுதல் யாமம்பூ சித்து. (உகூ)

அற்றை நிசியுறங்கா தர்ச்சித்துப் பாரணத்தை
மற்றையநாட் செய்கை வரம். (௩0)

ஆரணனை யர்ச்சித் தமுதருத்தி யன்பர்க்குப்
பாரணத்தை நீபின்பு பண். (௩௧)

பாரணஞ் செய்தான் பகலுறங்கி னூற்றுவரை
யாரணரைக் கொன்றபழி யாம். (௩௨)

உறங்கினன் சாந்தியெனு மோமம் புரிக
மறைந்துகெடு மேயந்த மாசு. (௩௩)

அங்குர மாதி யியற்று வகவினையு
மங்குமுறை செய்நூன் மதித்து. (௩௪)

அக்கால மாகச் சதுர்த்தசியி னர்ச்சித்துப்
புக்கான்வே டன்மேற் புரம். (௩௫)

தூர்த்தன் சுகுமார னந்தணன்மா கப்பூசை
பார்த்தான்கி தத்தாசைப் பட்டு. (௩௬)

அற்றான்முன் செய்த வவல வினையனைத்தும்
பெற்றான் சிவபுரத்தைப் பின். (௩௭)

நின்மலனை நூல்விதியி னர்ச்சித்த நேசர்க்குப்
பன்னவல்லா ராரே பலம். (௩௮)

கடனுறவிக் கற்பத்தைக் கற்றவர்கேட் டாரு
மடைவரம லன்சிவலோ கம். (௩௯)

---

# மாதசிவராத்திரிகற்பம்.

---

மாதசிவ ராத்திரியுஞ் சொல்வா மலமறுக்கும்
போதகன்பா தத்தார்வம் பூண்டு. (௧)

பங்குனிக்குஞ் சித்திரைக்கும் வைகசிக்கும் பாங்கபர
திங்களென வேநீ தெளி. (௨)

இரண்டுபதின் மூன்றைந் தெனுந்திதியிற் பூசை
யிரண்டற விசற் கியற்று. (௩)

மூந்தியுறும் பக்கந்தா னுனிமுத லைப்பசியே
யந்தமிவற் றிற்பாங்கே யாம். (௪)

மூன்றெட்டு மூந்நான்கைந் தேழு முறையுறவே
யான்றதிதி நாளருச்சி யாங்கு. (௫)

இருபக்கங் கார்த்திகைக்கு மார்கழிக்கு மேய்க்கு
மிருநான்கி ராறுதிதி யெண். (௬)

புரிகசிவ பூசையினைப் பூருவபக் கத்தி
னிருநான்கிற் றைமாதத் தின். (௭)

இட்டலிங்கந் தன்னிற் பரார்த்தத்து மிம்முறையே
யிட்டமுறப் பூசை யியற்று. (௮)

பாரணத்தை மற்றையநா டன்னிற் பகற்பணுக
பூரணனைப் பூசை புரிந்து. (கூ)

இரண்டு படினே திதியிரவி னேற்றந்
திரண்டதிதி தானே சிறப்பு. (க0)

இந்தமுறை மீன மெழுவாய் மகரத்தா
னந்த மிவற்றனைத்து மாம். (கக)

அற்றரே பாவ மருச்சித்தா ரிந்தமுறை
பெற்றார் சிவலோகம் பின். (கஉ)

அங்குர மாதி விதியறிந்தே யாகமத்தி
லிங்கியற்றி னன்றென்றே யெண். (கந)

இந்த வியலை யெழுதிற் படித்திடினும்
பந்த போமுறுமின் பம். (கச)

---

# சோமவார சிவராத்திரிகற்பம்.

தந்திமுகன் றுணிணைவாந் தானே தருமெம்முட்
சிந்தனை செய்வ சிறப்பு. (க)

சொல்வா மினிச்சோம வாரசிவ ராத்திரியு
மெல்லாஞ் சிவமென் றெணி. (உ)

சந்திரவா ரத்துதயந் தங்கியமா வாசைநிசி
யந்தியயா மத்திலுமுற் றால். (ந)

ஒருமூன் று கோடிசிவ ராத்திரியொ டொக்கும்
பரமசிவ னைப்பூசை பண். (ச)

அந்தியயா மத்தி னரைநா ழிகையுறினு
மந்தியயா மத்தினிறை வாம். (ரு)

அற்றிடினே யந்தியயா மத்தினமா வாசைசிறி
தற்றநிசி பூசைவர மன்று. (சு)

மற்றையநாட் பூசை முடித்து மறையவர்க்கு
நற்றவர்க்கு மோதனத்தை நல்கு. (எ)

அருந்தியதன் பின்னுறங்கா தன்றுபக லெல்லா
மிருந்துசிவன் பாதமல ரேத்து. (அ)

அருச்சித்தா ரிவ்வா றரித்துமல மெல்லாம்
பரித்திருப்பா ரீசன் பதம். (கூ)

உத்தரபக் கத்திற் சதுர்த்தசிமுன் னேதுமுறை
யொத்துறினே யவ்வாரத் துள். (க0)

அற்றை நிசியு மரியசிவ ராத்திரியாம்
பற்றறுப்பா னைப்பூசை பண். (கக)

பண்ணிடுக மற்றையநா ளைப்பகலிற் பூசனையைப்
பண்ணியதன் பின்பா ரணம். (கஉ)

அருத்தித் தவத்தார்க்குப் பின்று மருந்திற்
பரிப்பார் விரத பலம். (கங)

புரிந்தார்க ளிந்தநிசி யிற்சிவனைப் பூசை
பிரிந்தான் சிவலோகம் பெற்று. (கச)

அண்டமனைத் தும்மொடுங்கும் போதகனோ யற்றமலங்
கண்டுதினைப் பார்சிவபோ கம். (கரு)

உறுவ ருகந்தாரு மிங்கோன் புளத்தே
யறுவர்கா மாதிகல கம். (கசு)

ஓர்ந்தார்க ளிந்தவிய றத்தமுளத் தூனமலந்
தீர்ந்தே தினைப்பார் சிவம். (கஎ)

---

## மதராஸ் ரிப்பன் புஸ்தகசாலை,
## 91, தம்புசெட்டி வீதி, சென்னை.

| | | | |
|---|---|---|---|
| நைடதம் மூலமும் உரையும் (புதிய பதிப்பு) 27-லிதகிராப் படங்களும், ஒரு உயர்ந்த ஆப்டோன் படமும் ... | 2 | 0 | 0 |
| விநோதரசமஞ்சரி (புதிய பதிப்பு) கிலிட்டு பயிண்டு ... | 1 | 2 | 0 |
| கைவல்லியம் (ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பல சுவாமிகளியற்றிய தத்துவார்த்ததீபமென்னும் உரையுடன்) ... | 2 | 0 | 0 |
| இந்து பைபில் என்னும் ஆரியர் சத்தியவேதம்: (உபநிஷத்துக்கள் முதலிய இந்துமதத்தின் உண்மைகள்) ... | 1 | 12 | 0 |
| தாயுமானவர் பாடல் (அரும்பதக் குறிப்புடன்) சுவாமிகள் படத்துடன் (உயர்ந்த கிலிட்டு பயிண்டு) ... | 1 | 0 | 0 |
| அறப்பளீசுரசதகம் மூலமும் உரையும் ... ... | 0 | 10 | 0 |
| அறப்பளீசுரசதகம் மூலம் ... ... ... | 0 | 2 | 0 |
| குமரேசசதகம் மூலம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| திருவேங்கடசதகம் மூலம் ... ... ... | 0 | 2 | 0 |
| தண்டலையார்சதகம் மூலம் ... ... ... | 0 | 1 | 0 |
| கோவிந்தசதகம் ... ... ... ... | 0 | 0 | 9 |
| எம்பிரான்சதகம் ... ... ... ... | 0 | 1 | 0 |
| சிவசங்கரசதகம் ... ... ... ... | 0 | 0 | 9 |
| ஷை எழுசதகமும் ஒரே கட்டடமாகிய சதகத்திரட்டு ... | 0 | 9 | 0 |
| குசேலோபாக்யானம் மூலம், பதவுரை, பொழிப்புரை, விசேஷவுரை (26-படங்களுடன்) ... ... | 3 | 0 | 0 |
| மேற்படி மூலம் (அரும்பதப் பொருளுடன்) ... | 0 | 6 | 0 |
| திராவிட பூர்வகாலக் கதைகள் ... ... ... | 0 | 8 | 0 |
| திராவிட மத்தியகாலக் கதைகள் ... ... ... | 0 | 8 | 0 |
| தானவன் என்னும் போலீஸ் நிபுணன் கண்டுபிடித்த அற்புதக் குற்றங்கள் ... ... ... | 1 | 0 | 0 |
| ஸ்ரீ விருத்திப்பிரபாகரம் (வேதாந்த நூல்) ... ... | 4 | 0 | 0 |
| பஞ்சதசப் பிரகரணம் (வினவிடை) ... ... | 1 | 0 | 0 |
| பக்தலீலாம்ருத வசனம் (82-பக்தர்களின் சரித்திரம்) ... | 3 | 0 | 0 |
| பிரபோத சந்திரோதய வசனம் ... ... ... | 1 | 0 | 0 |
| பிரபுலிங்கலீலை வசனம் ... ... ... | 0 | 12 | 0 |
| குமாரதேவர் (மகாராஜா துறவு முதலிய) 16-சாஸ்திரம் | 0 | 10 | 0 |
| சூதசங்கிதை (தமிழ்ச்செய்யுள்) ... ... ... | 1 | 8 | 0 |